# பல்லாங்குழி விளையாட வைரங்கள்!



* ஒரு வைரக்கல்லைச் சோதிக்கிறார் ஜெயா.

"வைரத் தொழிற்சாலை!''

''என்னது? ஒற்றைக்கல் மோதிரம் அல்லது மூக்குத்திக்குக் கூட வக்கில்லாத போது, வைரத் தொழிற்சாலை பற்றிக் கனவு கூடக் காண முடியாதே! அதற்குக் கோடிக் கணக்கில் அல்லவா பணம் வேண்டும்?''

''அதுதான் இல்லை!'' என்கிறார் ஜெயலட்சுமி.

''அதிகபட்சமாக இருபதாயிரம் ரூபாய் முதலீட்டில் கருவிகளையும் உபகரணங்களையும் வாங்கி, ஒரு தொழிற்கூடத்தை வீட்டுக்குள்ளேயே—பத்தடிக்குப் பத்தடி அறைக்குள் கொண்டு வரலாம்'' என்கிறார்.

சூரத்தில் உள்ள 'இந்தியன் டயமண்ட் இன்ஸ்டிடியூட்'டில் சேர்ந்து வைரம் பற்றிய தொழில்முறைப் பயிற்சியை மேற்கொண்டார் ஜெயலட்சுமி. க்ச்சா வைரத்தை வெட்டி, செதுக்கி, மதிப்பு வாய்ந்த வைரமாக ஜொலிக்கும் வண்ணம் பட்டை தீட்டும் பயிற்சிகளைப் பதினோரு மாதங்களில் செவ்வனே முடித்தார்.

பயிற்சி பெறும் நாட்களில் மாலை வேளைகளில் சூரத்திலுள்ள வைரம் பட்டை தீட்டும் தனியார் தொழிற்சாலைகளுக்குச் சென்று அனுபவ அறிவும் பெற்றார். அவரைச் சந்தித்த போது:

''சூரத்தில் அநேகமாக ஒவ்வொரு வீட்டிலும் வைரத் தொழிற்சாலை உண்டு. மண் தரையில் ஒக்காந்துக்கிட்டு, பொம்பளைங்களும் குழந்தைங்களும் வைரத்தைப் பட்டை தீட்டும் அழகை நாளெல்லாம் பார்த்துக்கிட்டே இருக்கலாம். அந்த வீடுகள்ல வைர நகைகள் சர்வ சாதாரணம். குழந்தைங்க பல்லாங்குழி மாதிரி விளையாட்டுக்கு வைரக் கற்களைத்தான் உபயோகப்படுத்தறாங்க! 'வைர வியாபாரம் இருக்கு; படிப்பு எதுக்கு?' என்பாங்க. சட்டை பாக்கெட்ல நூறு இருநூறு வைரக் கற்களை வைச்சுக்கிட்டுத் தெருவிலே திண்ணபடியே, போறவர சுற்றுலாப் பயணிங்ககிட்ட வித்துக்கிட்டிருப்பாங்க. முதன் முதலா வைரம் இவ்வளவு சீரழியறதைப் பார்த்து அதிர்ச்சியாவே இருந்தது எனக்கு!

''தொழிற்சாலை ஆரம்பிக்க நாமே டிப்ளோமா வாங்கியிருக்கணும்கிறது கூட இல்லை. டிப்ளோமா வாங்கினவங்களை வேலைக்கு அமர்த்திக் கொள்ளலாம். வைர ஏற்றுமதி அபிவிருத்திக் கழகத்தில் தொழிலகம் ஆரம்பிக்க உதவுவாங்க. சிறு தொழில் முன்னேற்றத் திட்டத்தின் கீழ் அரசாங்கத்திலிருந்து லைசென்ஸ் வாங்கி, பட்டை தீட்ட ஆரம்பிச்சா, வெளிநாட்டு வியாபாரம் வாழ்க்கையிலே வர்ண ஜாலங்களை ஏற்படுத்தும். ஐயாயிரம் கோடி ரூபாய் மதிப்புள்ள வைரங்கள் ஒவ்வோர் ஆண்டும் இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகின்றனவென்றால் சும்மாவா! சுங்கவரி கிடையாது; வருமான வரி கிடையாது; ஏற்றுமதிச் செலவிலும் மிகக் கணிசமான அளவில் சலுகைகள் உண்டு!

'' கச்சா வைரத்திலிருந்து நமக்குத் தேவையான சுத்தவைரத்தைப் பெறமுடியுமா என்று உறுதியாகச் சொல்ல முடியாது. கிடைக்காமல் போனாலும் போகலாம்!''

"பாடுபட்டுப் பட்டை தீட்டிய வைரக் கல்லும் தனக்குள்ளே நிச்சயமாக ஒரு சிறு மாசு கொண்டுதான் இருக்கும். அது கரும்புள்ளியாகவோ, வெண்புள்ளியாகவோ இருக்கும். வெறும் கண் பார்வைக்கு அப்புள்ளிகள் தென்படா. இந்தக் கரும்புள்ளியைத்தான் நாம் தோஷம் என்கிறோம்.''

''முன்பெல்லாம் பெல்ஜியம் நாட்டிலிருந்து மிகச் சிறப்பான முறையில் பட்டைத் தீட்டப்பட்ட வைரங்கள் வந்தன. இப்போது சென்னையிலேயே சூப்பராகப் பட்டை தீட்டறாங்க. முறையான அணுகுமுறையும் வியாபார நோக்கும் இருந்தால், உலக அளவிலே ஓகோகோன்னு இருக்கிற பம்பாய் மார்க்கெட்டைச் சென்னை தூக்கிச் சாப்பிட்டுவிடும்...'' என்று கூறும் ஜெயா, விரைவிலேயே வைரம் பட்டை தீட்டும் தொழிற்சாலை துவங்கி, அதில் குடிசை வாழ் பெண்களுக்குப் பயிற்சியும் வேலையும் தரவிருக்கிறார்.

— பிரபுசங்கர்.

இக்கட்டுரைக்கு யோசனை தெரிவித்த வாசகர்: ஜமுனா, சென்னை.
பரிசு பெற உடனே முழு விலாசம் தெரிவிக்கவும்.
— ஆசிரியர்.

# குவைத்திலிருந்து

**பி.ஸ்ரீநிவாசரங்கநாதன் (அசோக்) தம்முடைய அனுபவங்களைக் கூறுகிறார்:**

**ஆ**கஸ்ட் 2. வியாழக்கிழமை. குவைத்தில் வியாழன், வெள்ளி இரண்டும் வாரத்தின் விடுமுறை நாட்கள். எனவே, நான் வேலை பார்த்து வந்த ஃபெர்டிலைசர் கம்பெனிக்கு அன்று செல்ல வேண்டிய அவசியம் இருக்கவில்லை. என்றாலும், கம்பெனியின் பொதுமேலாளரைச் சந்தித்துப் பேச வேண்டிய ஒரு முக்கியமான காரியம் இருந்தது. காரில் சென்றேன்.

அந்த நாட்டின் பெருமைமிகு சின்னமாக விளங்கும் குவைத் டவரிலிருந்து புகை வந்து கொண்டிருப்பது பார்வையில் பட்டது. காரணம் குறித்து யோசிக்கும் போதே, எதிரே சாலையில் ராணுவத்தினர் நிறையப் பேர் டிரக்குகளில் வந்து கொண்டிருந்தனர். அவர்களுக்குப் பின்னால் டாங்குகள். திரும்பிப் பார்த்த போது விமான நிலைய ரன்வேயிலிருந்து புகை வெளிப்பட்டுக் கொண்டிருப்பது தெரிந்தது. தொலைவில் எங்கோ குண்டுகள் வெடிக்கும் சப்தம். வானில் விமானங்கள் ...

டிரைவர் சந்திரனிடம் சொன்னேன். "இது படையெடுப்புதான். பக்கத்துல எங்கேயிருந்தாவது ஜி. எம். கிட்டே போன்ல பேசிப் பார்க்கிறேன். வண்டியைத் திருப்புங்க."

பேசினேன். பொதுமேலாளர் திட்டவட்டமாகச் சொன்னார்:

"ஈராக் ராணுவம் எல்லாத்தையுமே பிடிச்சாச்சு. எல்லா நிறுவனங்களும் அவங்க வசமாயிடுச்சு. இனிமே நான் உங்களுக்கு ஜி.எம்.மும் இல்லை. நீங்க என் உதவியாளரும் இல்லை. நாம நண்பர்கள். அவ்வளவுதான். அவங்கவங்க எப்படியாவது ஊருக்குப் போய்ச் சேருகிற வழியைத் தேடறதுதான் நல்லது."

**இ**ந்த மாதச் சம்பளம் வருவதற்கு இனிமேல் வழி இல்லை. பாங்குகள் மூடப்பட்டு விட்டன. கையில் காசு இல்லை.

பசியை உணரத் தொடங்கியதும் தப்பித்து வெளியேற வேண்டும் என்கிற தீவிர எண்ணம் தலையெடுக்கத் தொடங்கியது. இந்தக் குழப்பத்துக்கிடையில், ஈராக்கிய ராணுவத்தினர் வெவ்வேறு குழுவினராக அவ்வப்போது வந்து கதவைத் தட்டினார்கள். உள்ளே நுழைந்து சோதனையிட்டார்கள். "ஆயுதங்கள் ஏதும் வைத்திருக்கிறீர்களா?" என்று கேட்டார்கள். பாஸ்போர்ட்டுகளை வாங்கிப் பிரித்துக் கவனித்தார்கள். பயத்துடன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே சட்டென முகம் மலர்ந்தார்கள். "ஓ... இண்டியன்!" என்று சொல்லிச் சலாமிட்டுச் சென்றார்கள்.

*** ஸ்ரீனிவாச ரங்கநாதன்**



# சென்னைக்கு

பலர் குவைத்தை விட்டு வெளியேறுவதாகத் தகவல்கள் கிடைக்கத் தொடங்கின. வசதி படைத்தவர்கள் தங்கள் கார்களில் புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள். இந்தியத் தூதரகத்தில் விசாரித்த போது, "எவாக்குவேஷன் பற்றி எங்களுக்கு இதுவரை உத்தரவு எதுவும் இல்லை. டில்லியிலிருந்து உத்தரவு வரும் வரையில் தூதுவரகத்தின் சார்பில் உங்களை அனுப்பி வைக்க நாங்கள் எந்த நடவடிக்கையும் எடுப்பதற்கில்லை" என்று கூறிவிட்டார்கள்.

இதற்கு முன், ஏற்கெனவே, நான் வேலை பார்த்திருந்த ஓர் அமெரிக்கக் கம்பெனியின் மேலாளர் (கேரளத்துக்காரர்) நினைவுக்கு வந்தார். அவரைப் போய்ப் பார்த்துப் பேசிய போது சொன்னார்.

"நாங்க நூற்றைம்பது பேர் கம்பெனி பஸ்கள், வேன்கள் எல்லாத்தையும் எடுத்துக்கிட்டு பாக்தாத் வழியாக ஜோர்டான் போக முடிவு செய்திருக்கிறோம். நீயும் வரலாம். ஆனால், கொஞ்ச நாள் காத்திருக்கணும். காரணம், போதுமான பெட்ரோல், குடிதண்ணீர் எல்லாத்துக்கும் ஏற்பாடு செய்யணும். புறப்படும் போது தகவல் சொல்லி அனுப்பறேன்."

மையிருட்டின் விளிம்பில் மெலிதான ஓர் ஒளிக்கீற்று....

ஆகஸ்ட் 20. அதிகாலையில் ஐந்து மணிக்குப் புறப்பட்டோம். சம்பாதித்து வாங்கியிருந்த பொருள்கள் அனைத்தையும் அப்படியே விட்டு விட்டு, ஒரு ஷோல்டர் பேகில் அடங்கக்கூடிய துணிகளை மட்டும் எடுத்துக் கொண்டு கிளம்பினேன். மகன் ஹரிஷுக்கு வாங்கி வைத்திருந்த சில சட்டைகளை மட்டும் மறக்காமல் எடுத்துக் கொண்டேன். நாலைந்து நாட்களுக்குப் பிறகு அது எனக்குச் சோறு போடப் போகிறது என்பது அப்போது எனக்குத் தெரியாது!

வழியில் பார்க்கும் இடமெல்லாம் குவியல் குவியலாக ஈராக்கிய ராணுவத்தினர். டிரக்குகள், ஜீப்புகள், டாங்குகள். ஈராக்கிய வீரர்கள் இடையிடையே எங்கள் வாகனங்களை நிறுத்திச் சோதனையிட்டார்கள். இந்தியர்கள் என்று தெரிந்ததும், "அல்லா உங்களைக் காப்பாற்றட்டும். அதிர்ஷ்டம் இருந்தால் உயிரோடு உங்கள் நாட்டுக்குப் போய்ச் சேருவீர்கள்" என்று சொல்லியனுப்பினார்கள்.

பாக்தாத்தில் உள்ள இந்தியத் தூதுவரகத்தை அடைந்த போது ஏகப்பட்ட நெரிசல். தூதுவரகக் காம்பவுண்டினுள்ளும் வெளியே அதையொட்டிய பிளாட்பாரத்திலும் சற்றுத் தொலைவில் ஆற்றுப்படுகையிலுமாகச் சுமார் பத்தாயிரம் இந்தியர்கள். அவர்கள் பயணப்பட்டு வந்திருந்த பஸ்கள், வேன்கள், கார்கள்....

அடுத்த ஐந்து நாட்கள் பாக்தாத் நகரப் பிளாட்பாரத்தில் தான் வாழ்க்கை. தூதுவரகத்தில் தலா இரண்டு தினார்கள் தினமும் சாப்பாட்டுக்காகக் கொடுத்தார்கள். அது போதுமா, போதாதா என்பது வேறு விஷயம். அவர்களுடைய அப்போதைய நிதி வசதி அவ்வளவுதான்.

பாக்தாத்துக்கே இந்திய விமானங்களை வரவழைத்து எங்களை வெளியேற்றுவதற்குப் பேச்சு வார்த்தைகள் நடைபெறுவதாகத் தூதுவரகத்தில் தெரிவித்தார்கள். விமான டிக்கெட்டுகளை முன்னதாக வாங்கிக் கொண்டு விடலாம் என்றும் கூறினார்கள்.

எங்களைக் கண்ட மாத்திரத்தில் ஈராக்கிய பொது மக்கள் சூழ்ந்து கொண்டு, "பேண்ட் இருக்கா? ஷர்ட் இருக்கா? விசிஆர், கேசட், ஆடியோ... எது இருக்கு?" என்று கேட்கத் தொடங்கியிருந்தார்கள். வெளிநாட்டுப் பொருள்களின் மீது அந்த அளவுக்கு மோகம்.

சென்னையைச் சேர்ந்த நாங்கள் ஐந்து பேர் ஒரு குழுவினர் ஆனோம். அதில் ஒருவர் சொன்னார்.

"என்னிடம் ஒரு விசிஆர் இருக்கு. உங்களிடம் ஆளுக்கு ஒரு வாட்ச் இருக்கு. அப்புறம் என்ன? விமான டிக்கெட்டுகளுக்குப் போக மிச்சமிருந்தா கைச் செலவுக்காச்சு..."

அப்படியே செய்வது என்று முடிவு செய்து, ஒரு கடைக்காரரை அணுகி எங்கள் நிலைமையை விவரித்துப் பொருள்களைக் கொடுத்த போது 815 தினார்கள் கிடைத்தன. உடனடியாக ஐந்து பேருக்கும் விமான டிக்கெட்டுகள் வாங்கினோம். இந்திய விமானங்களின் வருகைக்காகக் காத்திருந்தோம்..

பிளாட்பார வாழ்க்கையின் நாலாவது நாள். ஊருக்குப் போய்ச் சேர முடியுமா, மகனைப் பார்க்க முடியுமா என்று ஒரே வேதனை. ஷோல்டர் பேகைத் திறந்து அவனுக்காக வாங்கியிருந்த சட்டையை எடுத்துப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

சட்டென்று ஒரு பெண்மணியின் கை நீண்டு அந்தச் சட்டையைத் தொட்டது. நிமிர்ந்த போது, ஓர் ஈராக்கியப் பெண்மணியும் அவளுடைய மூன்று அல்லது நாலு வயது மகனும் நின்றிருந்தார்கள். அருகில்

அவள் கணவன். உடைந்த ஆங்கிலத்தில் அவன் கேட்டான். "யூ செல்... ஷர்ட்... மை சன்..."

ஆங்கிலத்தில் பதில் சொன்னேன். "பசியைத் தணித்துக் கொள்வதற்காக உபரியாக இருந்த பேண்ட் ஷர்ட்டை விற்றேன். ஆனால் இது... என் மகனுக்காக வாங்கியது. தரமாட்டேன்."

சொல்லி விட்டேனே தவிர, அந்தச் சிறுவனைப் பார்த்த போது மனம் நெகிழ்ந்து போனது. பேசாமல் சட்டையை எடுத்து நீட்டினேன். வாங்கிக் கொண்டு பணம் தர முன் வந்தான். நான் மறுத்த போது என் கையைப் பற்றித் தரதரவென்று தன் வீட்டுக்கு இழுத்துக் கொண்டு போனான். சாப்பிட்டே ஆக வேண்டும் என்று வற்புறுத்தினான்.

"ஐ ஈட் நோ மீட் நோ ஃபிஷ்" என்றேன்.

விறு விறுவென்று உள்ளே சென்றவன் கத்தரிக்காயையும் வெண்டைக்காயையும் கொண்டு வந்து காட்டி, "யூ ஈட்?" என்று கேட்டான்.

அவ்வளவுதான் அடுத்த அரை மணியில் அருமையான சைவச் சாப்பாடு தயாராகி விட்டது.

**ஐ**ந்தாவது நாள் தூதுவரகத்தில் செய்தி சொன்னார்கள்.

"ஜோர்டான் எல்லை திறக்கப்பட்டு விட்டது. விமான டிக்கெட் உள்ளவர்கள் அம்மானுக்குச் சென்றால் அங்கேயிருந்து இந்திய விமானத்தில் பம்பாய் போய் விடலாம்."

விசாரித்த போது ஈராக் எல்லைவரையில் தனியார் பஸ் ஓடுவது தெரிந்தது. எல்லைக்கப்பால் நியூட்ரல் ஜோனில் அவை நுழையாது என்றார்கள். எல்லையை அடைந்து விட்டால், அப்புறம் நியூட்ரல் ஜோன் அதிகபட்சமாக ஏழு கிலோமீட்டர் இருக்கப் போகிறது — நடந்து விடலாம் என்று முடிவு செய்து பஸ் ஏறினோம். 750 கிலோ மீட்டர் கடந்து ஈராக் எல்லையைத் தொட்ட பிறகுதான் தெரிந்தது, நியூட்ரல் ஜோன் என்பது 75 கிலோ மீட்டர் தொலைவு கொண்டது என்று.

'எக்சிட்' முத்திரை குத்தி எல்லையைக் கடந்தாகி விட்டது. இனிமேல் என்ன செய்வது? அவ்வளவு தொலைவை நடந்து கடப்பது என்பது சாத்தியமா, என்ன?

அதிர்ஷ்டம் எங்களைக் கை விடவில்லை. ஆடுகள் ஏற்றிச் செல்லும் திறந்த வேன்கள் அங்கே இருந்தன. தலா ஐந்து தினார்கள் கொடுத்தால் ஜோர்டான் எல்லையில் கொண்டு விடுவதாகச் சொன்னார்கள். போய்ச் சேர்ந்த போது இரவு மணி பதினொன்று.

**ஜோ**ர்டான் எல்லையில் சுமார் 20,000 பேர் குவிந்திருந்தார்கள். எகிப்தியர்கள், பாகிஸ்தானியர்கள், பங்களா தேஷ்காரர்கள். அந்தந்த நாடுகளின் தூதுவரகங்கள் ஏற்பாடு செய்திருந்த பஸ்கள் அவர்களை ஒவ்வொரு ட்ரிப்பாக ஏற்றிச் சென்று கொண்டிருந்தன. விசாரித்த போது, இந்தியத் தூதுவரக பஸ்கள் இரவில் இயங்குவதில்லை என்றும் காலை ஏழு மணிக்குத்தான் முதல் பஸ் வரும் என்றும் தெரிந்தது.

இரவு முழுவதும் காத்திருக்க விருப்பமின்றித் தனியார் வேன் ஒன்றை ஏற்பாடு செய்தோம். கையில் மீதமிருந்த அத்தனை தினார்களையும் திரட்டிப் போட்டுக் கொடுத்தோம். அம்மானை அடைந்த போது காலை ஏழு மணி.

**அ**ம்மான் விமான நிலையத்தில் இந்திய விமானத்துக்கான க்யூவில் சுமார் 600 பேர் நின்றிருந்தார்கள். மொத்தம் நாலு ஃப்ளைட் என்றும் ஒன்று போயாகி விட்டது என்றும் சொன்னார்கள். இடம் நிச்சயம் என்ற நம்பிக்கை பிறந்தது.

வரிசையில் காத்திருந்து, இரண்டாவது ஃப்ளைட்டில் இடம் கிடைத்து விமானத்தினுள் நுழைந்த போது, இந்தியாவுக்குள்ளேயே காலடி எடுத்து வைத்த உணர்வு எழுந்தது.

**— சி. ஆர். கண்ணன்.**



## அடுத்த இதழில்...

- **சினிமாவை வீடியோ வீழ்த்துமா...?**
  — ஓர் அலசல்

- **மஹேச்வரியும் மல்லிகேச்வரரும்**
  — நவராத்திரி சிறப்புக் கட்டுரை

- **மத்யமர் — வாசகர்களின் விமர்சனங்களுக்கு சுஜாதாவின் பதில்**

# யூரேகா ஃபோர்ப்ஸ் நிறுவனத்திலிருந்து வரும் நண்பர், உங்கள் வீட்டிலுள்ள தூசையும் அழுக்கையும் மிக எளிதாக அகற்றும் வழியை செய்து காட்டப் போகிறார்.



வரும் நாட்கள் ஏதேனும் ஒன்றில் யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டுக் கதவைத் தட்டி, அடையாளச் சீட்டுடன் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்வார்.

அவர் பேச்சில் தன்னம்பிக்கை தொனிக்கும்— இதில் வியப்பேதும் இல்லை. ஏனெனில், இவர் இந்தியாவிலேயே இது போன்ற நிறுவனங்களில் மிகப் பெரியதும் வெற்றிவாகை சூடியதுமாகிய விற்பனை நிறுவனத்தின் அங்கத்தினர் ஆவார். இந்நிறுவனம் விற்பனைக்குப்பின் நம்பகமான சேவை புரியும் பின்னணி கொண்டது.

தூசு, சூழ்நிலை அசுத்தம், அசுத்தமான நீர் மற்றும் வீட்டு வேலைகளில் உதவியின்மை போன்ற இன்றைய பிரச்சினைகளை சமாளிப்பதற்கென நவீன வீட்டுபயோக சாதனங்களை அவர் உங்களுக்கு அறிமுகப்படுத்துவார்.

செயல்முறை விளக்கத்திற்கு இவரிடம் இரண்டு இணையற்ற தயாரிப்புகள் உள்ளன. யூரோக்ளீன்: அனைத்துபயோக சுத்தம் செய்யும் சாதனம். இது வேக்வம் க்ளீனரை விடச் சிறந்தது. மற்றும் அக்வாகார்ட்: நீர் பைப்பில் பொருத்தக்கூடிய வாட்டர் ஃபில்டர் கம்-ப்யூரிஃபையர்.

**யூரோக்ளீன்**: உங்கள் வீட்டில் உள்ள தூசு மற்றும் சிறு துரும்புகளையும்கூட சிரமமின்றி எளிதில் அகற்றுகிறது. கண்ணிற்கு புலப்படாத தூசுகள்கூட அகன்றுவிடும். **அக்வாகார்ட்**: ஒரு ஸ்விட்சை இயக்கி, குழாயைத் திறந்தால் கிருமிகள் அற்ற, பாதுகாப்பான சுத்தமான குடிநீரை உங்கள் குழாயிலேயே நீங்கள் பெறலாம்.



உங்கள் குடும்பத்திற்கு சுத்தம் மற்றும் சுகாதாரத்திற்கான நவீன முறைகளை இத்தயாரிப்புகள் எவ்விதம் வழங்குகின்றன என்பதை யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டிலேயே உபயோகித்து விளக்குவார். அதன் மூலம் உங்களைச் சுற்றிலும் சுத்தமும், சுகாதாரமும் நிறைந்த உலகம் உருவாகும்.

**அவர் உங்கள் வீட்டிற்கு வரும் நாள்வரை நீங்கள் காத்திருக்க வேண்டாம். விரைவில் வருகை புரிய கீழ்க்காணும் யூரேகா ஃபோர்ப்ஸ் அலுவலகங்கள் ஏதேனும் ஒன்றில் தொடர்பு கொள்ளுங்கள். அல்லது இம்முகவரிக்கு எழுதுங்கள்: யூரேகா ஃபோர்ப்ஸ், லிமிடெட்., பி.ஓ. பாக்ஸ் 936, ஜி.பி.ஓ. பம்பாய்-400 001.**



**யூரோக்ளீன்**
அனைத்துபயோக சுத்தம் செய்யும் சாதனம் —வேக்வம் க்ளீனரை விடச் சிறந்தது.

**அக்வாகார்ட்**
நீர் பைப்பில் பொருத்தக் கூடிய வாட்டர் ஃபில்டர் கம் ப்யூரிஃபையர்.

**யூரேகா ஃபோர்ப்ஸ் லிமிடெட்**
நவீன முறை சுத்தம் சுகாதாரத்தின் முன்னோடிகள்.

everest/89/EFL/188 R 2-tm



* "என் பிழைப்பின் மூலம் பிறரை மகிழ்விக்க முடிகிறதெனில் இது எவ்வளவு ஆனந்தமான தொழில்...!"

# "என் வாழ்க்கையே ஒரு திரைக்கதை...!"

## மனம் திறந்து பேசுகிறார் எஸ்.பி.பி.

கல்கி: மிகப் பிரபலமான பின்னணிப் பாடகரான நீங்கள் மிகச் சிறந்த நடிகரும் கூட என்று 'கேளடி கண்மணி' படத்தில் நிரூபித்திருக்கிறீர்கள். இதற்காக முதலில் பாராட்டுக்கள்... அப் படத்தில் உங்கள் நடிப்பைப் பற்றிக் குறிப்பிட்ட போது நடிகை ராதிகா, பின்னணிப் பாடகர்கள் "மைக்குக்குப் பின்னால் நடிப்பவர்கள்; நாங்கள் காமெராவுக்கு முன்னால் நடிக்கிறோம்" என்று குறிப்பிட்டார். இதைப் பற்றி உங்கள் கருத்து என்ன...?

ஸ்ரீபதி பண்டிதராத்யுல பாலசுப்ரமணியம்: ராதிகா சொன்னது வாஸ்தவம்தான். இதே கருத்தை முன்பு எம். எஸ். விஸ்வநாதன் அவர்கள் வெளியிட்டிருக்கிறார். ஒரு நல்ல பாடகர், நல்ல நடிகராகவும் இருக்க வேண்டும். பாத்திரத்தின் உணர்ச்சியுடன் நடிகர் ஒன்றுவது போல் பாட்டின் உணர்ச்சியுடன் பின்னணிப் பாடகர் ஒன்ற வேண்டும் நடிக்க வேண்டும் என்று அடிக்கடி வலியுறுத்தி வந்தவர் கமலஹாசன். பல தெலுங்குப் படங்களில் அவருக்காக நான் 'டப்' செய்ததைப் பார்த்தும் கேட்டும் அடிக்கடி இந்த அறிவுரையை வழங்குவார். நான் நடித்தால் உங்கள் பாணியை மறந்து சுய முத்திரையோடு நடிக்கவே முடியாது. என் ரத்தத்தில் ஊறி விட்ட உங்கள் நடிப்பை முதலில் வெளியேற்ற முயற்சி செய்கிறேன். பிறகு சுயமாக நடிக்கிறேன்' என்று நானும் அவரிடம் விளையாட்டாய் பதிலுக்குச் சொல்வேன். தெலுங்குப் படங்களில் ஏதோ சிறு வேடங்களை ஏற்று நடித்துக் கொண்டிருந்தேன். தமிழில் 'மனதில் உறுதி வேண்டும்' படத்தில் டாக்டர் வேடத்தில் நடித்தேன். அந்தப் பாத்திரம் பலருடைய கவனத்தைக் கவர்ந்து விட்டது. அப் படத்தை இயக்கிய பாலசந்தருக்கு அப்போது உதவியாளராக இருந்தார் வஸந்த். அவர் சொந்தமாகப் படம் இயக்க முற்பட்ட போது 'கேளடி

என்பார். பின்னணிப் பாட்டு முறை வருவதற்கு முன் பிரபல பாடகர்கள்தானே முக்கிய வேடங்களில் நடித்துக் கொண்டிருந்தார்கள்...

கல்கி: பின்னணி பாடிய அனுபவம் நடிப்புக்கு உதவியதா...?

எஸ். பி. பி: நேரடியாக உதவாவிட்டாலும் டென்ஷனைக் குறைத்துத் தென்பைக் கொடுத்தது.

கல்கி: நீங்கள் நடிப்புத் துறைக்குள் நுழைந்தது எப்படி?

எஸ். பி. பி: நான் பெரிய நடிகனாக வேண்டும் என்று நினைத்ததேயில்லை. இப்போதும் அத் துறையில் பெரிய சாதனை புரிவேன் என்று நான் நம்பவில்லை. நான்

கண்மணி' கதையுடன் என்னிடம் வந்தார். முக்கிய பாத்திரம் ஏற்க வேண்டும் என்றார். முதலில் நான் அவர் சொன்னதைக் கேட்டுச் சிரித்து விட்டேன். ஏதாவது 'சின்ன ரோல் கொடுத்தால் செய்கிறேன் என்னையும் என் தோற்றத்தையும் நம்பி என்னை முக்கிய பாத்திரமாகப் போடாதீர்கள்' என்றே கூறினேன். 'இந்தப் படம் தோல்வியுற்றால் நான் தொடர்ந்து பின்னணிப் பாடுவது பாதிக்கப்படாது; ஆனால் உங்கள் எதிர்காலம் நிச்சயமாகப் பாதிக்கப்படும்' என்றேன். ஆனால் வஸந்த் உறுதியுடன் இருந்தார். என்னைச் சம்மதிக்க வைத்தார். அதன் பிறகு ஷூட்டிங் தேதிகளை என் பாடல் பதிவு தேதிகளோடு மோதாமல் அமைத்துத் தந்தார். 'பிலி' கலைஞரான ராதிகா உள்பட எல்லோருமே அட்ஜஸ்ட் செய்து கொண்டு உதவினார்கள்.

கல்கி: பல தயாரிப்பாளர்களும் இயக்குனர்களும் தங்கள் படங்களில் உங்களை நடிக்கச் சொல்லிக் கேட்கிறார்களாமே...?

எஸ்.பி.பி: ஆம். ஆனால் நான் எல்லாருடைய அழைப்பையும் ஏற்கவில்லை. இரண்டு படங்களில் நடிக்கத்தான் ஒப்புக் கொண்டிருக்கிறேன். ஒன்று 'கவிதாலயா' வுக்காக அனந்த் இயக்கவிருக்கும் சிகரம் என்ற படம். இதில் ஓர் இசையமைப்பாளராகப் பிரதான பாத்திரம். மற்றொன்று, ஒளிப்பதிவாளர் ஸ்ரீராம் காசியை நிலைக்களனாகக் கொண்டு எடுக்கவிருக்கும் படம்... ஒரு வருடத்தில் இரண்டு படங்களுக்கு மேல் என்னால் ஏற்க முடியாது. ஏற்கெனவே பின்னணி பாடுவதற்காக வெளியூர் போய் வந்து கொண்டிருக்கிறேன்; வாரத்தில் ஒரு நாள் கூட ஓய்வில்லாமல் ஒலிப்பதிவு நிகழ்ச்சிகள் இருந்து கொண்டேயிருக்கின்றன. நடிப்புக்கு நேரம் ஒதுக்குவது கஷ்டம் என்பதோடு நான் ஏற்கும் பாத்திரங்களையும் மிகக் கவனமாகத் தேர்ந்தெடுக்க விரும்புகிறேன். ஒரு சராசரி கவர்ச்சி ஹீரோ வேடத்தை நான் ஏற்க முடியாது...

கல்கி: இதே கவனத்தை நீங்கள் பாடும் பின்னணிப் பாடல்களைத் தேர்ந்தெடுப்பதில் ஏன் செலுத்துவதில்லை...?

எஸ்.பி.பி: ரிகார்டிங் ஸ்டுடியோவுக்குள் நுழைந்த பிறகுதான் பாடல் வரிகளும் டியூனும் எங்களுக்குத் தரப்படுகின்றன. கடைசி நிமிஷத்தில் 'இந்தப் பாட்டை நான் பாட மாட்டேன்' என்று மறுத்து விட்டு வெளியேறுவது ரொம்பக் கஷ்டம். அப்படியும் ஓரிரு தெலுங்குப் படப் பாடல்களின் வார்த்தைகள் மிக விரசமாக இருந்தன என்பதால் பாட மறுத்து வெளியேறியிருக்கிறேன்.

கல்கி: ஒரு பாட்டு ஏன் ஹிட் ஆகிறது என்று நீங்கள் ஆராய்ந்து பார்த்ததுண்டா...?

எஸ்.பி.பி: எனக்கு மட்டுமல்ல, திரை இசைத் துறையில் யாருக்குமே 'ஒரு பாட்டு ஏன் ஹிட் ஆகிறது' என்பது உறுதியாகத் தெரியாது. அந்தச் சூத்திரம் தெரிந்திருந்தால் வருகிற ஒவ்வொரு பாட்டுமே 'ஹிட்' பாட்டாகத்தானே இருக்கும்.....! திரையிசைப் பாடலின் வெற்றி, சம்பந்தப்பட்ட எல்லாக் கலைஞர்களின் ஒத்துழைப்பையும் முயற்சியையும் பொருத்தே அமையும். முதலில் சாகித்யம் — வார்த்தைகள் நன்றாக அமைய வேண்டும். பல்லவி 'பளிச்' சென்று இருக்க வேண்டும். ஆனால் திரைப்பாடலாசிரியரோ மெட்டுக்கு ஏற்பப் பாடல் எழுத வேண்டியுள்ளது. பாடல் பதிவு நன்றாக அமைந்தாலும், அது இடம்பெறும் காட்சியில் தமது நடிப்பின் மூலம் அதற்கு மெருகு சேர்ப்பவர்கள் நடிகர்கள். சினிமாப் பாட்டைக் காட்சியோடும் நடிகரோடும் தொடர்புபடுத்தித்தான் ரசிகர்கள் கேட்கிறார்கள். இதனால்தான் ஒரு காலகட்டத்தில் எம்.ஜி.ஆர். அவர்கள் நடித்த காட்சிப் பாடல்கள் எல்லாமே 'ஹிட்' ஆகின. நடிகரின் ஆகர்ஷண சக்தியால் பாட்டு பலம் பெறுகிறது. நடிகர் சரியாக நடிக்காவிட்டால் பாடலின் வலிவு குறையும். ஒளிப்பதிவும் இயக்கமும் சரியில்லை என்றால்

**• "நன்றாயிருந்தால் பாட்டு; இல்லையென்றால் தீப்பாட்டு...!"**





**"எதுக்குப்பா கல்யாணத்துக்கு நான் போக வேண்டாம். தம்பி போகட்டும்ங்றே?"**

**"தம்பிக்குத்தான் செருப்பு இல்லை!"**

**— எஸ். சுந்தரராஜ்.**

ஒலிப்பதிவில் நன்றாக அமைந்த பாடல் ஹிட் ஆகாமல் போவதுண்டு. அதே போல் சுமாராகப் பாடப்பட்ட பாடலும் நடிகர் இயக்குனர், இதர கலைஞர்களின் மெருகூட்டலால் பிரபலமாகி விடுவதுமுண்டு.

கல்கி: சில பழைய பாடல்கள் பசுமை மாறாமல் இன்னமும் ரசிகர்கள் மனத்திலும் செவிகளிலும் ரீங்காரம் செய்கின்றன. இப்போது அத்தகைய பாடல்கள் அமைவதில்லை என்ற கருத்து பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?

எஸ். பி. பி: பழைய பாடல்கள்தான் மிக இனிமையானவை என்பதை ஏற்பதற்கில்லை. அவற்றுக்கு இணையான பாடல்கள் இன்றும் வருகின்றன. பாட்டின் வெற்றிக்கான காரணங்களில் மற்றொன்று அது திரும்பத் திரும்பக் கேட்கப்பட்டுச் செவி வழியே மனத்தில் இடம்பிடித்து விடுவது தான். இதற்கு ரேடியோ டீவி ஆகிய சாதனங்கள்தான் உதவும். இருபது வருடங்களுக்கு முன் ஆண்டொன்றுக்குச் சுமார் இருபது திரைப்படங்கள் வெளிவரும். அவற்றில் ஏறக்குறைய 130 பாடல்கள் இருக்கும். 365 நாட்களில் 130 பாடல்களைத் திரும்பத் திரும்பக் கேட்க வாய்ப்புக்கள் அதிகம். ஆனால் இப்போது ஒரு வருடத்தில் சுமார் 150 படங்கள் வெளியாகின்றன. அவற்றில் ஆயிரம் பாடல்கள்! இதனால் ரசிகர்களின் கவனம் சிதறிப் போய் விடுகிறது. ஒரு பாட்டை மனத்தில் இருத்திக் கொள்வதற்குள் போட்டியாக வேறொன்று கிளம்பி விடுகிறது.

கல்கி: பத்து, பதினைந்து ஆண்டுகளுக்கு முந்தைய இசையமைப்புக்கும் இப்போதைய இசையமைப்புக்கும் வித்தியாசமில்லை என்கிறீர்களா? இசையின் ஜீவன் மாறிவிடவில்லையா....?

எஸ். பி. பி: ஒலிப்பதிவுத் தொழில் நுட்பத்தில் பிரமிக்கத்தக்க முன்னேற்றம் இருப்பதால் பாடல் பதிவு வசதியாகவும் சௌகரியமாகவும் ஆகியிருக்கிறது என்பதைத் தவிர இசையமைப்பிலோ இசையின் ஜீவனிலோ மாற்றம் எதுவும் கிடையாது. இசையின் ஜீவன் எப்படி மாற முடியும்? இசை என்றும் இளமையானது, புதுமையானது. அதே சப்த ஸ்வரங்கள்தான் என்றென்றைக்கும் இருக்கும். எனவே பழைய பாட்டு, புதிய பாட்டு என்று இனம் பிரிப்பதை நான் ஏற்பதில்லை... 'நன்றாக இருந்தால் அது பாட்டு; நன்றாக இல்லையேல் நிப்பாட்டு!' — இதைத்தான் நான் சொல்வேன்.

கல்கி: 'கேளடி கண்மணி' படத்தில் உங்கள் நடிப்பு மிகச் சிறப்பாக அமையக் காரணம் என்னவென்று நினைக்கிறீர்கள்?

எஸ். பி. பி: என் நடிப்பு மற்றவர்களுக்குப் பெரிய விஷயமாகத் தோன்றியிருக்கலாம். ஆனால் நான் டைரக்டர் வஸந்த் சொன்னதைச் செய்தேன், அவ்வளவுதான். அவர் புது டைரக்டர் என்ற உணர்வே ஏற்படவில்லை. ஒவ்வொரு காட்சியமைப்பும் இப்படியிப்படி இருக்க வேண்டும் என்ற தீர்மானத்துடன் வருவார். செட்டில் வந்து சந்தேகப்பட்டு யோசிக்க மாட்டார். அதே சமயத்தில் மற்ற கலைஞர்களிடமும் கருத்து கேட்பார். வஸந்தின் திரைக்கதை அற்புதமாக இருந்தது. நீளநீளமான வசனங்கள் இல்லாமல் இயல்பான, அர்த்தமுள்ள உரையாடல்கள். ராதிகாவின் நடிப்பு பிரமாதம். ஆர்ட் டைரக்ஷன் மிகக் கவனமாகச் செய்யப்பட்டிருந்தது. எல்லாவற்றுக்கும் மேலாக நடுத்தர வர்க்கத்து நடுத்தர வயதினரைப் பற்றிய கதைக் கரு — இது எல்லார் நெஞ்சையும் தொட்டது... பதினைந்து வருடங்களாக சினிமாத் துறையில் இருப்பதால், பின்னணி பாடுவதோடு படத் தயாரிப்பின் இதர அம்சங்களையும் நான் கூர்ந்து கவனித்து வருகிறேன். அவற்றைப் பற்றி நிறையக் கற்றுக் கொண்டிருக்கிறேன். இந்த அனுபவம்தான் வஸந்த் எதிர்பார்த்ததைச் செய்ய எனக்கு உதவியிருக்கவேண்டும். மேலும் படக்கதை, வஸந்த் பல காட்சிகளை வடிவமைத்த விதம் — என் கருத்துக்களோடும், சிந்தனையோடும் மிகவும் ஒத்துப் போயின. எனக்கும் பணியாற்றுவது சுலபமாயிற்று.

கல்கி: நீங்கள் திரையிசைக் கலைஞரானது எப்படி? சின்ன வயதில் முறையான இசைப் பயிற்சி பெற்றீர்களா?

எஸ். பி. பி: இசைப் பயிற்சி பெற்றதில்லை. ஆனால் இசைக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்ததால் (என் தந்தை ஒரு பிரவசன கர்த்தா. பெயர் எஸ். பி. சாம்பமூர்த்தி.) நல்ல சங்கீதம் செவிவழிப் பாடமாயிற்று. வீட்டு விசேஷங்களில் "'மணி', பாடு!" என்பார்கள். பாடுவேன். அதே போல் பள்ளி, கல்லூரியிலும் போட்டி, விழாக்களில் பாடி வந்தேன். கல்லூரிக் கலை நிகழ்ச்சியில்தான் தெலுங்குப் பட இசையமைப்பாளர் எஸ். பி. கோதண்டபாணி என்னைக் 'கண்டுபிடித்து' சினிமாத் துறைக்கு இழுத்தார். அதுவரை நான் சினிமாவில் பாடுவது பற்றிச் சிந்தித்ததே இல்லை. அவ்வாறு நடக்கும் என்று கனவு கூட கண்டதில்லை. பி. சுசீலா, எஸ். ஜானகி, லதா மங்கேஷ்கர், ஆஷா



"ஏம்பா டி.வி.யை வித்துட்டியாமே?"
"தினமும் டி.வி.யில் தமிழ்ச் செய்தியைப் பார்த்து விட்டுப் புடைவை, புடைவை என்ற மனைவியின் நச்சரிப்பைத் தாங்க முடியலை, அதான்..."
— வீ. ஆறுமுகம்.

போன்ஸ்லே போன்றோரை நான் நேரில் பார்ப்பேன் என்று கூட நினைக்கவில்லை. நான் ரசித்து, மதித்துப் போற்றிய இந்தக் கலைஞர்களுடனெல்லாம் பாடுவதற்கு எனக்கு வாய்ப்புக் கிடைத்தது என்பதை யோசித்துப் பார்க்கும் போது, என் வாழ்க்கையே ஒரு அற்புதமான திரைக்கதைதான் என்று உணர்கிறேன்...

கல்கி: இருபதாயிரம் பாடல்களைப் பதிவு செய்துள்ள நீங்கள் திரைப்பாடகராக வேண்டும் என்ற குறிக்கோளுடன் செயல்படவில்லை என்றீர்கள். உங்கள் குறிக்கோள் என்னவாக இருந்தது....?

எஸ்.பி.பி.: ஓர் இன்ஜினியராக வேண்டும் என்ற குறிக்கோள்தான் இருந்தது. பள்ளியிலும் கல்லூரியிலும் படிப்பில் முதலிடம் பெற்று வந்தேன். சினிமாவில் பாட அழைப்பு வந்த போது அப்பாவிடம் போய் யோசனை கேட்டேன். ஒரு சராசரி தந்தை. அதுவும் பிரவசனத்தைத் தொழிலாகக் கொண்டவர். சினிமாவெல்லாம் வேண்டாம்; அதில் வெற்றி காண முடியாவிட்டால் படிப்பும் வீணாகிப் போகும். படிப்பை முடித்து, குடும்பத்துக்குப் பணம் சம்பாதித்துத் தரும் வழியைப் பாரு என்று தான் கூறுவார். எனக்கு ஐந்து சகோதரிகள் மூன்று சகோதரர்கள். கீழ்மத்தியதர வகுப்புக் குடும்பம். எவ்வளவு கஷ்டப்பட்டிருப்போம் என்று சொல்லத் தேவையில்லை. என் பள்ளிப் படிப்புக் காலத்தைத் தாய் மாமனுடன்தான் கழித்தேன். அப்படியிருந்தும் என் அப்பா எந்த முடிவையும் என் மீது திணிக்கவில்லை. 'ஒரே சமயத்தில் இரண்டு குதிரைகளில் சவாரி செய்ய முயலாதே' என்று மட்டும் எச்சரிக்கை செய்தார். 'கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டு ஒரு முடிவை எடு; அதன்படி நட; அது சரியான முடிவுதானா என்று காலம்தான் பதில் சொல்லும்' என்றார். நானும் தெய்வத்தை நம்பி படிப்பைக் கைவிட்டேன். அந்த முடிவு சரியானதுதான் என்று காலம் உணர்த்தி விட்டது... நான் விவரம் தெரிந்து வாழ்ந்த வாழ்க்கையின் ஒவ்வொரு நிமிஷத்தையும் முழுமையாக அனுபவித்து வந்திருக்கிறேன். என் பங்குக்குச் சுகத்தோடு துக்கமும் சுமந்திருக்கிறேன். ஆனால் கடவுள் என் முன் தோன்றி ஒரு வரம் அளித்தால், எனது கடந்த முப்பது வருட வாழ்க்கையை மீண்டும் வாழ வேண்டும் என்றே வேண்டிக் கேட்டுக் கொள்வேன். என் ஆயுளை நீட்டிப்பதற்காக அல்ல; ஒரு கணவனாக, மகனாக, தந்தையாக, கலைஞனாக — மனிதனாக, நான் வாழ்ந்த ஒவ்வொரு அனுபவத்தையும் மீண்டும் உணர்ந்து அனுபவிப்பதற்காக...

கல்கி: வாழ்க்கையைத் திரும்பிப் பார்ப்பது ஒருபுறமிருக்க, எதிர்காலத் திட்டம் என்ன? ஏதாவது லட்சிய நோக்கு உண்டா?

எஸ்.பி.பி: இவ்வளவு வருடங்களாகப் பாடிக் கொண்டிருக்கிறேன்; ஒரு வயதுக்கு மேல் குரல் வளம் கம்மியாகும். அது நேர்வதற்கு முன்பே ஒதுங்கிக் கொள்ள வேண்டும் என்று எண்ணுகிறேன். பாடுவதை நிறுத்தி விட்டு, படங்களை இயக்கக் கற்றுக் கொள்ள வேண்டும் என்பது நோக்கம். சினிமா உலகம் மிகச் சுவாரஸ்யமான ஒன்று. அதை இங்கும் அங்கும் கொஞ்சம் கொஞ்சமாகப் பார்த்து வந்திருக்கிறேன். முழுமையாகத் தெரிந்து கொள்ள ஆசை. அதனால்தான் இப்போதே சில பிரபல டைரக்டர்களிடம், அவர்களுக்கு அசிஸ்டண்டாகப் பணியாற்ற வாய்ப்புக் கேட்டிருக்கிறேன். அவர்களும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். 'பாலு வந்திருக்கிறான்' என்று நாற்காலியைப் போட்டு உட்கார வைத்து விடாதீர்கள். நான் நிஜமான அசிஸ்டெண்டாகப் பணியாற்றி விஷயங்களைக் கற்றுக் கொள்ள வேண்டும்' என்றும் கூறியிருக்கிறேன். நல்ல கருத்துள்ள படங்களைத் தரமான முறையில் வழங்க வேண்டும் என்று எனக்கு ஆசை. பாலச்சந்தரைப் போல், கே. விஸ்வநாத்தைப் போல்...

கல்கி: உங்கள் ரசிகர்களைப் பற்றி...

எஸ்.பி.பி: ஒரு கலைஞனின் வெற்றிக்கு இன்றியமையாதது அவர்களுடைய ஆதரவு தானே.... என் ரசிகர்கள் என்னிடம் வந்து உங்கள் பாட்டினால் எங்களையெல்லாம் மகிழ்விக்கிறீர்கள் என்று சொல்லும்போது நான் நெகிழ்ந்து போகிறேன். பிழைப்புக்காகப் பாட வந்தவன்தானே நான். அதன் மூலம் அவர்களை மகிழ்விக்க முடிகிறது என்றால் இது எவ்வளவு ஆனந்தமான தொழில்... சில சமயம் ரசிகர்கள் என்னைக் கடுமையாய் விமர்சிப்பதும் உண்டு. விமர்சனங்களைத் தாங்கிக் கொள்ளும் மன உறுதியும் எனக்கு உண்டு. கடவுள் எனக்கு வழங்கியுள்ள திட சித்தம்தான் என்னை நிலைதடுமாறாமல் காத்து வருகிறது. அதற்காக நான் அவருக்கு நன்றி செலுத்துகிறேன்.

**— நமது நிருபர்கள்**

அட்டை வண்ணப்படம், படங்கள்:
**ஜே. டி. ஜானி**


ஆட்டோ சங்கர்
ஐயோ... உருவிட்டுப் போயிட்டானே!


மீட்டுக் கொண்டுவந்திட்டோம்


முலாயம் சிங் யாதவ்
கருணாநிதி
மேரா தோஸ்த்... இந்திதான் தேசீய மொழி... ஆங்கிலம் ஒழிக!
நண்பரே... ஆங்கிலம்தான் தேசீய மொழி... இந்தி ஒழிக!


மக்கள் அவை...
பிரசார் பாரதிக்கு ஆதரவு!
ராஜீவ்


பிரசார் பாரதிக்கு எதிர்ப்பு!
மாநிலங்கள் அவை...



கல்கி

1990 செப்டம்பர் 16
மலர் : 49 இதழ் 7
பிரமோதூத ஆவணி 31



# அன்பு மார்க்கமா, அடிதடி மார்க்கமா?

திருவல்லிக்கேணி — இந்துக்களும் முஸ்லிம்களும் நீண்ட காலமாகவே அருகருகே அமைதியாக மட்டுமின்றி, அந்நியோன்னியமாகவும் வாழ்ந்து வந்திருக்கிற பகுதி. அரசியல் கட்சிகள், இந்துக்களும் ஏற்கக் கூடிய ஒரு முஸ்லிமை அங்கே வேட்பாளராக நிறுத்துவது என்பது ஒரு மரபாகவே உருவாகியிருக்கிறது. அப்படிப்பட்ட திருவல்லிக்கேணியில் இன்று மதக் கலவரம்! அதுவும் புனிதமான விநாயக சதுர்த்தியையொட்டி.

அங்கு மட்டுமா? இல்லை! ஹோசூரில், கோலாபூரில், பரோடாவில், ஆனந்தில் என்று பல ஊர்களிலும் விநாயக சதுர்த்தியையொட்டிய ஊர்வலங்களின் போது மதக் கலவரங்கள் நடந்துள்ளன. தொடர்ந்து, சமூகவிரோதிகள் கடைகளைச் சூறையாடுவதும் நிகழ்ந்துள்ளது.

இதையெல்லாம் பார்க்க, 'அரசியல் காரணங்களுக்காக ராம ஜன்மபூமிப் பிரச்னையைப் பல தரப்பினரும் வளர விட்டதன் பின் விளைவோ?' என்று எண்ணத் தோன்றுகிறது. அந்தப் பிரச்னை மக்கள் மனத்தில் எழுப்பிய புகைச்சல் அடங்காமலிருந்து, விநாயகர் சிலை ஊர்வலங்களின் போது வெடித்ததாகக் கருத இடமுண்டு.

இது விசனிக்கத்தக்க விஷயம் எனில், அதைவிடத் துயரத்துக்குரியது, எந்த ஒரு மதத் தலைவரும், "இதெல்லாம் தவறு; ஒரு மதத்தைப் பின்பற்றுகிறவர்கள் மற்றொரு மதத்தினரின் உணர்வுகளுக்கு மதிப்புத் தரக் கற்றுக் கொள்ள வேண்டும்" என்று பகிரங்கமாக மக்களுக்கு உரத்த அறிவுரை வழங்காததுதான். மாறாக, இவர்கள் அவர்களையும், அவர்கள் இவர்களையும் குறை கூறுகிறார்கள். இருவருமாகச் சேர்ந்து போலீஸார் மீது பழி சுமத்துகிறார்கள்!

போலீஸ் நடந்து கொள்ளும் விதத்தில் தவறில்லை என்றாலும் குறைபாடு இருக்கிறது. ஊர்வலத்துக்கு லைசென்ஸ் வழங்குவதும், ஊர்வலத்தின் போது லத்தி சுழற்றியபடி சில போலீஸ்காரர்கள் உடன் செல்வதும் மட்டுமே அவர்கள் கடமைகள் அல்ல. அதற்கும் மேல் இருக்கிறது. லைசென்ஸ் கோரப்பட்டதுமே ஊர்வலம் செல்வது எந்த வழியில் என்று பார்த்து, அந்த மார்க்கத்தில் எழக் கூடிய கலவரங்களை ஊகித்து, அவை நிகழா வண்ணம் போதிய முன்னெச்சரிக்கை நடவடிக்கை எடுக்க வேண்டும். இந்து மத ஊர்வலம் எனில் மசூதித் தலைவரிடம் சென்று ஒத்துழைப்புக் கோர வேண்டும். ஊர்வலமாக வருவோரிடமும் நன்னடத்தைக்கு உத்தரவாதம் கேட்க வேண்டும். ஊர்வலத்துக்கு முன்னதாகவே இருதரப்பிலும் போதிய அளவு நேசப்பான்மை வளர போலீஸ் அதிகாரிகள் முயற்சி மேற்கொள்ள வேண்டும். 'இதெல்லாம் எங்கள் கடமை அல்ல' என்று போலீஸார் ஒதுக்க முடியாது. சட்டம் ஒழுங்கு நிலைநாட்டுவது என்பதில், சட்டம் ஒழுங்குப் பிரச்னைகளைத் தவிர்ப்பதும் உள்ளடங்கியதே.

போலீஸுக்கு எப்படி இருவிதக் கடமைகள் உண்டோ, அவ்வாறே மதத் தலைவர்களுக்கும் உண்டு. குறிப்பிட்ட ஒரு மதத்தை அல்லது அதன் ஒரு மார்க்கத்தை வலியுறுத்திச் சொல்ல வேண்டியது அவர்களுடைய தலையாய கடமை என்பதை மறுக்க இயலாது. அதே நேரத்தில் அம்மதத் தலைவர்கள், தாங்களும் இந்த நாட்டுப் பிரஜைகளே, இந்நாட்டின் அரசியல் சாசனத்தை ஏற்றுக் கொண்டவர்களே என்பதை மறக்கக் கூடாது. இதை மறக்காமல் இருந்தால், தங்கள் மதத்தைப் போஷித்து வளர்க்கும் கடமையோடு, பிற மதத்தினரின் உணர்வுகளை மதிக்கின்ற கடமையும், அதனைத் தங்களைப் பின்பற்றுவோருக்கு உணர்த்த வேண்டிய கடமையும் தங்களுக்கு இருப்பதை அறிந்து செயல்படுவார்கள். அரசியல் சாசனத்தை ஒதுக்கிவிட்டு மதரீதியாகப் பார்த்தால்கூட, இந்து மதமும் சரி, இஸ்லாமும் சரி, போதிப்பது அன்பு மார்க்கத்தையே. அடிதடி மார்க்கத்தை அல்ல.

'முதல் செருப்பை வீசியது, அல்லது முதல் கல்லை எறிந்தது யார்?' என்பது அல்ல பிரச்னை. 'வீசப்பட்ட முதல் கல் அல்லது செருப்புக்குப் பதிலாக, இன்னொரு கல் அல்லது செருப்பை வீசாமலிருக்கும் மனப்பக்குவத்தையும், வீரத்தையும் மதத் தலைவர்கள் மக்களிடம் வளர்த்திருக்கிறார்களா?' என்பதே முக்கியக் கேள்வி.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.



# 133 அடி வள்ளுவர் சிலை தேவைதானா?

* சிவ குமரேசன், காளப்பனூர்.

? 'கல்கி' என்பதன் விளக்கத்தைத் தெரியப் படுத்தினால், 'சிவகாமியின் சபதம்' ஆரம்ப மானது முதல் என்னைப் போல் புதிதாகக் கல்கிவாங்கிப் படிக்க ஆரம்பித்துள்ள பல்லா யிரக்கணக்கான நண்பர்கள் பயன் பெறு வார்களே?

! "பழைமையான சம்பிரதாயங்களையும் அர்த்தமற்ற பழக்க வழக்கங்களையும் விட் டொழித்துப் புதுமை யுகத்தை மலரச் செய் யும் எனது நோக்கத்துக்கு அனுசரணை யாகப் பகவானின் பத்தாவது அவதாரமும் புதுயுகத்தைக் குறிப்பதுமான 'கல்கி' என்ற பெயரை வைத்துக் கொண்டேன்; வேறு எந்தவிதக் காரணமும் கிடையாது" என்று கல்கியே கூறியிருக்கிறார்.

* கே. மகேஷ், சங்கராபுரம்.

? வானொலி விளம்பரங்கள், டி.வி. விளம் பரங்கள் — வாழ்க்கையை அதிகம் வெறுக்க வைப்பது எது?

! கற்பனை வறண்டு போன விளம்பரங்கள் இரண்டிலுமே இடம் பெற்றாலும், மலிவு விலை விளம்பரம் என்பதால் ரேடியோ வில் ரொம்பவே ஓவர். டி. வி. தலைவலி என்றால் வானொலி மண்டை இடி!

* எல். டேனியல் சந்துரு, சேத்துப்பட்டு.

? அரசுவைப் போல் தராசுவும் மூவர் கொண்ட கூட்டணிதானே?

! கூட்டணிதான். ஆனால் மூவர் அல்ல. தராசு, அவர்கள் பெயர்களுடைய முதலெ ழுத்துக்களும் அல்ல.

* ரவி பாலாஜி, சேலம்.

? 'துர்கா,' 'அஞ்சலி' — எந்த ஷாமிலி





நடிப்பு தூள்?

! அஞ்சலியில் மணிரத்னமும் 'பளிச்' சென்று தெரிந்தார். துர்கா டபுள் ரோலில் ஷாமிலி மட்டுமே தெரிந்தாள். அஞ்சலியில் கனத்தது மனசு; துர்காவில் ஒரே கலகல.

* அ. ராஜா ரஹ்மான், திருப்பரங்குன்றம்.

? ஜெயலலிதா சட்டமன்றத்து ரிஜிஸ்தரில் கையெழுத்திட்டுத் திரும்பியது எப்படி உருப் படியான காரியமாகும்?

! உறுப்பினர் பதவி பறிபோகாமல் தக்க வைத்துக் கொண்ட அளவில் உருப்படியான காரியம்தான்.

* காமாட்சி சத்தியநாராயணன், வேலூர்.

? மலிவு விலை மதுவை எதிர்த்து மனித நேயமிக்க பொறுப்பானவர்கள் மனிதச் சங்கிலி வாயிலாகத் தங்கள் எண்ணத்தை வெளிப்படுத்திய செயலைத் தமிழக முதல்வர், தமது குடும்பப் பத்திரிகையில் 'கலைஞர் பக்கம்' பகுதியில் ஏளனமாகக் குறிப்பிட்டிருக்கிறாரே?

! அதிலே இரண்டு வாதங்களை முன் வைக் கிறார். ஒன்று, பிற மாநிலங்களில் மதுவிலக்கு இல்லை. இரண்டு, மனிதச் சங்கிலிப் போராட்டம் நடத்தியவர்களிலேயே சில 'கறுப்பு ஆடுகள்' உள்ளன. இந்த இரு வாதங்களுமே அவரது வழக்கமான கவனத் தைத் திசை திருப்பும் வாதங்கள்தாமே தவிர, மலிவு விலைச் சாராய உற்பத்தி, விநியோ கத்தை அவர் தமிழகத்தில் கட்டவிழ்த்து விட் டிருப்பதை நியாயப்படுத்தக் கூடிய

வாதங்கள் ஆகாது. அவரால் இச்செயலை நியாயப்படுத்தவும் முடியாது.

* சி. சந்திரசேகரன், வேலூர்.

? 'தமது முழு நேரத்தையும் அ.தி.மு.க.வை உடைப்பதற்கே செலவிடுகிறார் கருணாநிதி' என்று ஜெயலலிதா சாடியுள்ளதைப் பற்றி...?

! 'தமது முழு நேரத்தையும் அ.தி.மு.க.வை உடைப்பதற்கே செலவிடுகிறார். ஜெயலலிதா' என்று கூறுவதே சாலப் பொருத்தமாக இருக்கும். ஒரு வாதத்துக்காகக் கருணாநிதி சதி செய்தார் என்றே வைத்துக் கொண்டாலும் அதில் சிக்காமல் இருப்பதுதானே இவர் சாமர்த்தியம்? அதைக் காண முடியவில்லையே!

* கிஷோர், திருச்சி.

? 'திறமை ஒரு குறிப்பிட்ட ஜாதியினருக்கு மட்டுமே உரித்தானதல்ல' என்று கருணா



நிதியே ஒப்புக் கொள்ளும்போது ஜாதி அடிப்படையிலான இட ஒதுக்கீடு எதற்கு?

! 'ஒதுக்கீடு இல்லாமலே பிற்படுத்தப்பட்ட வகுப்பினரில் பலர் பிரகாசித்தார்கள்; ஒதுக்கீடு செய்து ஊக்குவித்தால் மேலும் பலர் தோன்றுவார்கள்' என்று ஒரு விளக்கவுரையுடன் அவர் கருத்தைக் கவனியுங்களேன்! அடிப்படைப் பிரச்னை ஒதுக்கீடு அல்ல. பிற்படுத்தப்பட்டவர்களை முன்னேற்ற விசேஷ முயற்சிகள் ஏதும் இல்லாமைதான். பின்னது நடந்தால் முன்னதற்கு அவசியமில்லாது போகும்.

* ஆர். அப்துல் சலாம், திருச்சி.

? இந்தியாவுக்கு ரகசியங்கள் கூறியதாக பேநசீர் மீது ராஜத் துரோகக் குற்றம் சாட்டப்பட்டுள்ளதே?

! ஜனநாயகத்தை 'ஸஸ்பெண்ட்' செய்திருப்பதாகக் கூறும் பாக் தலைமை, அதனை அடியோடு குழிதோண்டிப் புதைப்பதற்கு வசதியாக ஏற்றிருக்கும் முதற்கட்டப் பணி பேனசீரைத் தீர்த்துக் கட்டுவது.

* ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.

? விலைவாசி உயர்வது பற்றித் தராசின் கருத்து?

! முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும். பட்ஜெட்டின் பலன் விலைவாசியில் புரியும். ரூபாயின் மதிப்பு இன்று 11 பைசா!

* பி. மணிபாலா, மன்னார்குடி. *

? வள்ளுவர் கோட்டம் போதாது என்று இப்போது 133 அடி உயரச் சிலை தேவைதானா?

! தேவையில்லை. 133 புதிய தொழிலகங்கள் தேவை. அது முடியாவிட்டால் ஒரு புதிய தொழிலகத்தில் 133 பேருக்கு வேலை வாய்ப்பு ஏற்படுத்துவதே மேலானது. வள்ளுவர் வாசகம்படி ஆட்சி நடத்தாத போது வள்ளுவருக்கு வரிப்பணத்தில் பிரும்மாண்ட சிலை வைப்பது எதற்கு? அதில் தங்கள் பெயரை நிலைநாட்டிக் கொள்ளும் ஆசையும் உள்ளடங்கியிருக்கிறது.

* சபேசன், தாம்பரம்.

? லாரி மோதிப் பச்சிளம் பாலகர்கள் பதினோரு பேர் மரணமடைந்திருக்கிறார்களே...?

! சகிக்க முடியாத வேதனை. இந்த ஓட்டுனருக்குத் தண்டனை தருவது இருக்கட்டும். எத்தனை ஓட்டுனர்கள் சாராயத்துக்கு அடிமைகளாகியுள்ளனர் என்பதைக் கவனிப்பது நல்லது.



* ரூ. 20 பரிசு பெறுபவர்:

பி. மணிபாலா,
26, வலியன்காரத் தெரு,
மன்னார்குடி — 614 001.

# துப்பாக்கி ரகசியம்

## அஞ்சனா மைக்கேல்ராஜ்

**பா**கிஸ்தான் ராணுவத்தைச் சேர்ந்தவர்கள்.

அமீர் ஜவஹரின் இதய இயந்திரம் ஒரு முறை தடுமாறியது.

"நான் இந்தியன் இல்லை. பாகிஸ்தானி" என்றான் அவன் கைகளை உயரத் தூக்கிக் கொண்டே. அவன் உருது அப்பழுக்கின்றி இருந்தது.

"இந்த மாதிரி சொல்லி வரும் எத்தனை இந்திய நாய்களை நாங்கள் பார்த்திருக்கிறோம். கலீம். செக் ஹிம்! கெட் ரிட் ஆஃப் இ ராட்."

கலீம் என்று அழைக்கப்பட்டவன் அமீர் ஜவஹரை நெருங்கிச் சோதனையிட்டான். அவன் இடுப்பு ரிவால்வரைக் களைந்து எடுத்துக் கொண்டான். மார்பில் அவன் பதுக்கியிருந்த உருதுப் புத்தகத்தை வெளியே எடுத்தான்.

விலகி நடந்தான்.

அமீர் ஜவஹருக்குச் சற்று ஏமாற்றமாகக் கூட இருந்தது. அடிப்பார்கள். குறைந்த பட்சம் கையில் விலங்கை மாட்டியாவது இழுத்துப் போவார்கள் என்று எதிர்பார்த்திருந்தான்.

**இ**ருபது நிமிடங்களுக்குப் பிறகு ராணுவ முகாமின் தடித்த் கித்தான் கூடாரத்திற்குள் அவன் கைகளைக் கட்டி நின்றான். நாற்காலியில் உட்கார்ந்திருந்த ஒரு மேலதிகாரியின் கைகளில் அமீர் ஜவஹர் கொண்டு வந்திருந்த அந்தப் 'புத்தகம்.'

"ஸார். அதைத் திறக்காதீர்கள்" என்றான் அமீர் ஜவஹர். அவன் குரலில் லேசான எச்சரிக்கை கூட இருந்தது.

அதிகாரி நிமிர்ந்தார். அமீர் ஜவஹரை இரண்டே எட்டில் நெருங்கி அறைந்தார்.

"முதலில் யாரிடம் எப்படிப் பேச வேண்டும் என்று தெரிந்து கொள்."

"அவசரப்படுகிறீர்கள் ஆஃபீஸர்" என்றான் அமீர் ஜவஹர் மிரளாமல்.

"யார் நீ?"

"அமீர் ஜவஹர். உத்தரவுகளை நான் நேரடியாக மேஜர் ஜெனரல் மிஸ்டர் அப்துல் கரீமிடமிருந்துதான் பெறுவது வழக்கம். என்னைப் பற்றி வேறு என்ன தகவல் வேண்டுமென்றாலும் அவரைக் கேளுங்கள்."

"மேஜர் ஜெனரல் அப்துல் கரீம்?"

"ஆம் சார்."

அந்த அதிகாரி அவசர அவசரமாகத் தொலைபேசிக் கருவியை அருகே இழுத்தார்.

**ரா**வல் பிண்டி.

கான்க்ரீட் தளத்தில், அமீர் ஜவஹரைச் சுமந்து வந்திருந்த பாக் ராணுவ ஹெலிகாப்டர். அதன் மண்டைக் காற்றாடியின் இறக்கைகள் இன்னும் மெதுவாகச் சுழன்று கொண்டிருந்தன. தரையெங்கும் மழை ஈரம். ஆயுதம் தாங்கிய ராணுவத்தினர் அங்கங்கே விழிப்புடன் நின்று கொண்டிருந்தனர். சன்னமாகப் பெய்து கொண்டிருந்த மழையைப் பொருட்படுத்தாமல். பாதரச விளக்கின் வெளிச்சக் கதிர்கள்.

மேஜர் ஜெனரல் அப்துல் கரீம் இரவுச் சாப்பாட்டின் துணுக்குகளைத் தம் பற்களுக்கிடையேயிருந்து சுவாரசியமாக விலக்கிக் கொண்டிருந்தார். சீருடையில் இருந்தார்.

"ஸிட்—டவுன்!"

அமீர் ஜவஹர் விறைப்பாக உட்கார்ந்தான். முதல் முறையாக மேஜர் ஜெனரலைச் சந்திப்பதால், அவருடைய உடல்வாகு அவனுள் ஓர் ஆச்சரியக் குறியைப் போட்டது.

மேஜர் ஜெனரல் ஒரு பூதக் கண்ணாடியை எடுத்து முட்டை வடிவ மேஜையில் பரப்பப்பட்டிருந்த ப்ரோமைட் போட்டோக்

**COUNT DOWN — 17**



> ஒற்றை ஒற்றனைப் பிடிப்பதால் ஒரு நீளமான சங்கிலியின் ஒரு வளையம்தான் உடைக்கப்படுகிறது. அந்த வளையத்தை நிராகரித்து விட்டு, அடுத்த வளையம் சங்கிலியோடு கோத்துக் கொண்டு விட்டால் ஒற்றனைப் பிடிக்க எடுத்துக் கொண்ட அத்தனை முயற்சிகளும், இழந்த தூக்கங்களும், சிந்திய வியர்வையும் ரத்தமும் வீணாகிவிடும்.
>
> — கில்ஸ் பெரால்ட்.

களில் அச்சாகியிருந்த வாசகங்களைக் கூர்ந்து பார்த்தார். பத்து நிமிடப் பரிசோதனைக்குப் பிறகு நிமிர்ந்தார்.

''ரஷ்யாவிலிருந்து போர் விமானங்கள் வாங்குவதற்கான ஆர்டர்.''

''யெஸ் சார். கொஞ்சம் கூர்ந்து பார்த்தால் இன்னொரு விஷயமும் தெரியும் சார்.''

''என்ன?''

''விமானங்களின் உதிரி பாகங்கள் என்று சில எண்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.''

''ம்.''

''அவை ரகசிய எண்கள். அவை உண்மையில் உதிரி பாகங்களைக் குறிப்பவை அல்ல.''

''0047, 0086, 0098 என்று குறிப்பிடப் பட்டிருக்கும் எண்களா?''

''ஆம் சார்.''

''அவற்றுக்கு என்ன அர்த்தம்?''

''நாம் தனியாகப் பேச வேண்டும் ஸார்.''

மேஜர் ஜெனரல் அவனை உயர்த்திய புருவங்களுடன் பார்த்தார். பின் அமீர் ஜவஹருக்குப் பின்னால் நின்றிருந்த சில அதிகாரிகளைப் பார்த்தார். அவர்கள் அனைவரும் விலகி, அறையிலிருந்து வெளியேறினார்கள்.

''மேஜர் நாஸர் உனக்கு நன்றாகத்தான் பயிற்சி கொடுத்திருக்கிறார். அவர் மட்டும் ட்ரெய்னிங் காம்ப்பிற்குப் போகாமல் இருந்திருந்தால் இந் நேரம் இந்த அறையில் இருப்பார். இந்த எண்கள் அவ்வளவு ரகசியமானவையா என்ன?''

''ஆம் ஸார். அதனால்தான் நான் உங்களிடம் மட்டும் சொல்வேன் என்று பிடிவாதமாக வந்திருக்கிறேன். இந்த எண்கள் சில நவீன ஆயுதங்களைக் குறிக்கின்றன. எந்த எண் எந்த ஆயுதத்தைக் குறிக்



கிறது. அந்த ஆயுதம் எப்படி வேலை செய்கிறது என்ற விவரமெல்லாம் இன்னொரு பேப்பரில் இருந்தது சார். என்னால் போட்டோ எடுக்  டியவில்லை. ஆனால் அத்தனை விஷய  ளையும் மனத்தில் பதித்துக் கொண்டு வந்திருக்கிறேன்.''

''குட் ஒர்க். சொல் இந்த 0047 என்ற எண் எதைக் குறிக்கிறது?''

''சின்ன பாட்டரிகள் போன்ற கருவிகள், அவை எப்படி செயல்படுகின்றன என்று நான் ஒரு சின்ன சோதனை நடத்திக் காட்ட வேண்டும் ஸார்.''

''கோ அஹெட்.''

''வித் யுவர் பர்மிஷன் ஸார்'' என்று அமீர் ஜவஹர் எழுந்தான். அவன் கொண்டு வந்திருந்த உருதுப் புத்தகத்தின் முதுகுப் பக்கம் இருந்த காலிகோ துணியைக் கிழித்தான். புத்தகத்தின் முதுகில் இரண்டு அங்குல அகலம், ஐந்தங்குல நீளம், ஓரங்குல ஆழம் என்ற பரிமாணத்தில் ஒரு செவ்வகக் குழி இருந்தது. அந்தக் குழியில் விரல் நீள பாட்டரிகள் போல நான்கு உலோக சிலிண்டர்கள் இருந்தன. சிலிண்டர்களில் பேனா மூடிகளில் இருக்கும் கிளிப் போன்ற ஓரமைப்பு இருந்தது. அப்புறம் காட்பரீஸ் சாக்லேட் போன்ற ஒரு பிளாஸ்டிக் பட்டை. அதில் இருந்த நான்கு வண்ணக் குமிழ்கள்.

அமீர் ஜவஹர் நான்கு உருளைகளில் இரண்டை வெளியில் எடுத்தான். ஒன்றை அறை மூலையில் இருந்த பீரங்கியின் மூக்கில் நுழைத்தான். இன்னொன்றை மேஜர் ஜெனரலிடம் நீட்டினான்.

''என்ன இது?''

''சார், இந்த சிலிண்டரை உங்கள் துப்பாக்கி உறையில் போடுங்கள் சார்.''

மாஜிக் ஷோ நடத்துகிறவன் பேச்சுக்குப் பார்வையாளன் அடிபணிகிற மாதிரி மேஜர் ஜெனரல் தம் இடுப்பில் இருந்த துப்பாக்கி உறையில் இருந்து துப்பாக்கியை எடுத்து டிராயரில் வைத்துப் பூட்டினார். காலியான தோலுறையில் அமீர் ஜவஹரிடம் இருந்து பெற்ற உருளையைப் போட்டார்.

''பித்தானை அழுத்தி மூடி விடுங்கள் சார்.''



மூடினார்.

''சார் 0047 என்பது இதுதான்'' என்றான் அமீர் ஜவஹர். சொல்லிக்கொண்டே புத்தகத்தின் முதுகில் இருந்த பிளாஸ்டிக் பட்டையை எடுத்து, அதில் இருந்த நான்கு குமிழ்களில் ஒரு குமிழைத் தேர்ந்தெடுத்து அழுத்தினான்.

அறை மூலையில் இருந்த பித்தளை பீரங்கி இரண்டாகப் பிளந்து தரையில் விழுந்தது. ஓசை அறையை நிரப்பினாலும், அறையை விட்டு வெளியேறவில்லை.

''அசையாதீர்கள் மேஜர் ஜெனரல். உங்கள் தோலுறையில் நீங்கள் போட்டுக் கொண்டிருப்பது ஒரு நவீன வெடிகுண்டு. என் கையில் இருக்கும் ரிமோட் கன்ட்ரோலின் சுவிட்சை அழுத்தினால், வெடிகுண்டில் இருக்கும் ஃப்யூஸ் ஒயர்கள் இணைந்து அது வெடிக்கும். வெடித்ததால் பித்தளை பீரங்கியே இரண்டாகப் பிளந்து விட்டது. நீங்கள் தாங்க மாட்டீர்கள். ஹான்ட்ஸ் அப்!''

மேஜர் ஜெனரல் அவன் கட்டளைக்கு அடிபணிந்தார். எழுந்து நாற்காலியில் இருந்து விலகி நின்றார். அமீர் ஜவஹர் அவரை நெருங்கி மிச்சமிருந்த இரண்டு குண்டுகளையும் அவர் தானாக எடுக்க முடியாதபடி, அவருடைய பான்ட்டின் லைனிங்கைக் கிழித்து அதில் ஒன்றைச் செருகினான். இன்னொன்றை அவரது கால் சாக்ஸின் உள்ளே நுழைத்துக் கிளிப் போட்டான்.

''மேஜர் ஜெனரல், நீங்கள் என்னோடு ஆர்மி ஹெட் குவார்ட்டர்ஸ் வரை வர வேண்டி இருக்கிறது.''

''எதற்காக?''

''கேள்விகள் வேண்டாம் ஸார். நேரம் வீணாகிறது.''

''உன்னை... உன்னை...''

ஒரு பறவையின் பார்வையில், ராணுவ ஜீப் அந்த கான்க்ரீட் சதுரத்தில் இருந்து விலகியது தெரிந்தது. சென்ட்ரிகள் தங்கள் மரியாதையை சல்யூட் மூலம் காண்பித்தார்கள். ஒரு சாதாரண அமீர் ஜவஹர், மேஜர் ஜெனரலின் பக்கத்தில் உட்கார்ந்து போவது அவர்களுக்குள் ஓர் ஆச்சரியத்தை எழுப்பி விட்டாலும், மேஜர் ஜெனரலைப் பற்றி நன்கு தெரிந்திருந்ததால் அவர்கள் ஆச்சரியங்களை மனத்திலேயே அழித்தார்கள்.

மேஜர் ஜெனரல் எந்த நேரத்திலும் புதிதாக நடந்து கொள்பவர். தம் இஷ்டப்படி செயல்படுபவர். ஒரு கணம் பனியாக உருகுபவர். அடுத்த கணம் இரும்பாக இறுகுபவர். கேள்விகளுக்கு அப்பாற்பட்டவர். தம் பதவியின் அதிகாரத்தைப் பரிபூரணமாக உபயோகப்படுத்துபவர். தமது கீழதிகாரிகளை நாய்களை விடக் கேவலமாகச் சில சந்தர்ப்பங்களில் நடத்துபவர்.

இத்தனை விஷயங்களும் அமீர் ஜவஹருக்குச் சாதகமாகவே அமைந்தன.

உயிரே போனாலும் சரி, கர்னல் அருள்தாஸ் அவனிடம் கொண்டு வரச் சொன்ன அந்தத் துப்பாக்கியைக் கைப்பற்றாமல் பாகிஸ்தானை விட்டு விலகப் போவதில்லை. தந்திரமாகத் திருட முடியாத அளவு பாதுகாப்பு இருந்தது அந்தத் துப்பாக்கிக்கு. அதனால்தான் இந்தத் திட்டம்.

கர்னல் அருள்தாஸ் அவனிடம் பேசியதை அவன் இன்னொரு முறை நினைவு கூர்ந்தான்.

'அமீர் ஜவஹர்... அந்த மைக்ரோ ஃபிலிம்களில் என்ன அடங்கியிருக்கிறது என்றுதானே கேட்டாய்? சொல்கிறேன். இந்தியாவில் இப்போது எரியும் பிரச்னையாக இருப்பது என்ன என்று உனக்குத் தெரியாமல் இருக்காது. பஞ்சாபும், காஷ்மீரமும். இரண்டு இடங்களிலும் தீவிரவாதிகள் தாக்கு தாக்கு என்று தாக்குகிறார்கள். வெற்றுத் தாக்குதல் இல்லை. ஆயுதத் தாக்குதல். அவர்கள் மெஷின் கன்களை உபயோகிக்கிறார்கள். ஆயுதங்களை உபயோகிக்க அவர்கள் பயிற்சி பெற்றிருக்கிறார்கள். அவர்களுக்கு ஆயுதப் பயிற்சி அளிப்பது பாகிஸ்தான்—சமீபத்தில் இந்தியத் தொலைக்காட்சியில் செய்தி ஒளிபரப்பாகியது.

'மை டியர் அமீர்... தொலைக்காட்சியில் ஒளிபரப்பாகாத செய்தி ஒன்றும் இருக்கிறது. கேட்டால் நீ அதிர்ச்சி அடைவாய். இந்தியாவின் பல வேறு இடங்களில் தீவிரவாதிகளுக்கென்று முகாம் அமைத்து ஆயுதப் பயிற்சி அளிக்கப்படுகிறது. இங்கே அவ்வளவு தைரியமாக ஊடுருவிப் பயிற்சி அளிப்பவர்கள் பாகிஸ்தானியர்கள். அவர்களைக் கண்டுபிடிக்க வேண்டும். கண்டுபிடித்து நசுக்க வேண்டும். இங்கேதான் உன் உதவி தேவைப்படுகிறது அமீர் ஜவஹர்.

'இந்தியாவில் எங்கெங்கே ஆயுதப் பயிற்சி முகாம் அமைத்திருக்கிறார்கள், பயிற்சி கொடுப்பதில் எந்தெந்த ஆஃபீஸர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள் என்னும் விவரமெல்லாம் நான் சொல்லும் டம்மி துப்பாக்கியில் இருக்கிறது. அதில் உள்ள மைக்ரோ ஃபிலிம்களில் பதிவாகி இருக்கிறது. அந்தத் துப்பாக்கியில் ஓர் எண் பொறிக்கப்பட்டிருக்கிறது. 996090. அதுதான் எங்களுக்கு வேண்டும். நாங்கள் அமைதியை விரும்புகிறவர்கள் அமீர் ஜவஹர். நீ கொண்டு வந்து தரப் போகும் மைக்ரோ ஃபிலிம் எங்களுக்கு இந்தியாவில் அமைதியை நிலைநாட்டவே பயன்படப்போகிறது.

ஜீப் ஆர்மி ஹெட் க்வார்ட்டர்ஸை, சன்னமான மழையினூடே நெருங்கியது. நின்றது.

அமீர் ஜவஹர் இறங்கினான். மேஜர் ஜெனரல் இறங்கினார்.



"என்ன சுஜாதா... நீ பெருக்கிக்கிட்டிருக்கே...?"

"பக்கத்து வீட்ல, 'மாமியார் — மருமக' சண்டை நடக்குது. போய்ப் பார்த்துட்டு வாடின்னு 'முனியம்மாவை' அனுப்பி வைச்சேன்..."

— ஆர். வசந்தகுமார்.

"எங்கே?"

"உங்கள் அலுவலக அறைக்குப் போக வேண்டும்."

மேஜர் ஜெனரல் விறைப்பாக நடந்தார். சென்ட்ரிகள் விலகி வழி விட்டார்கள்.

மேஜர் ஜெனரல் சில படிகளை ஏறிக் கடந்த போது, எப்போதுமில்லாமல் அவருக்கு மூச்சிரைத்தது. பயத்தால். ஒரு சாதாரண ரகசிய உளவாளி தன்னை இவ்வளவு தூரம் ஆட்டிப் படைக்கிறானே என்ற பொருமலால். தம் கையாலாகாத் தனத்தால்.

அறைக்குள் நுழைந்ததும் அமீர் ஜவஹர் கதவைச் சாத்தினான்.

"மேஜர் ஜெனரல். உங்களுடைய அறையில் இருக்கும் ஸேஃப் வால்ட்டைத் திறந்து அதில் இருக்கும் ஒரு துப்பாக்கியை எனக்கு எடுத்துக் கொடுங்கள்!"

"முட்டாளே. ஸேஃப் வால்ட்டில் ஏது துப்பாக்கி?"

"இருக்கிறது. அந்தத் துப்பாக்கியில் 996090 என்ற நம்பர் பொறிக்கப்பட்டிருக்கிறது."

மேஜர் ஜெனரல் அவனைத் திகைப்புடன் பார்த்தார்.

"நோ!"

"மறுக்காதீர்கள் மேஜர் ஜெனரல். அப்புறம் நீங்கள் பாகிஸ்தானுக்கு உபயோகமில்லாதவராகப் போய் விடுவீர்கள்" என்று ரிமோட் கன்ட்ரோல் குமிழில் விரல் பதித்தான்.

க்ளிக்.

குமிழ் அழுத்தப்படவில்லை.

கதவு திறக்கப்பட்டதன் ஒலி. அமீர் ஜவஹர் இந்த இடையூறை எதிர்பார்க்கவே இல்லை. மிக மெதுவாக அவன் திரும்பிப் பார்த்தான். மேஜர் ஜெனரலும் திரும்பிப் பார்த்தார்.

பத்தொன்பது வருட காலம், அமீர் ஜவஹரை வளர்த்து, பயிற்சி அளித்து, ஆளாக்கிய மேஜர் நாஸர், சிரித்துக் கொண்டே கதவருகே நின்றிருந்தார்.

(தொடரும்)

# கணவனின் 'திருமணம்'

முதலிரவு அறையின் அலங்கார நுட்பங்களைப் பூர்த்தி செய்து கொண்டிருந்த ஷோபாவின் கண்கள் குளமாகிக் கொண்டிருந்தன. இன்னும் ஒரு மணி நேரத்தில், அவள் கணவன் அவனுடைய இரண்டாவது மனைவியுடன் வர இருக்கிறான். பழைய நினைவுகள் பாய்ந்து வரத் தொடங்கின ஷோபாவுக்கு.

ஏழாண்டுகளுக்குமுன், அவள் அந்த வீட்டு எஜமானியாக வலது காலை முன் வைத்து நுழைந்தது நினைவுக்கு வந்தது. அவள் பெற்றோருக்கு எப்படி அவள் ஒரே குழந்தையோ, அதே போல் அவள் கணவனும் அவன் பெற்றோருக்கு ஒரே மகன். இரண்டு குடும்பங்களின் ஆசை அபிலாஷைகளுக்கும் ஏக பிரதிநிதியாக அவளே ஆக்கிரமிப்பு செய்துவந்தாள். அவள் மீது அவள் தோழிகளுக்கு எத்தனை பொறாமை! அவளுடைய பெற்றோருக்கும் அவள் மீது எத்தனை பாசம் கலந்த மகிழ்ச்சி! தாய் தந்தையை விட்டுப் பிய்த்துக்கொண்டு எத்தனை தூரம் அவள் செல்ல இருக்கிறாள்? உயர்வான ஒரு மாப்பிள்ளை அவர்களுக்குக் கிடைத்து விட்ட ஒன்றுதான் இந்தப் பிரிவு என்னும் சோகத்தைப் பின்னுக்குத் தள்ளி விட்டது. சுஷில் ஒரே பிள்ளை என்பது மட்டும் இல்லை; உயர் கல்வி பெற்றுப் பம்பாயில் ஒரு சிறந்த வேலையிலும் இருந்தான். ஓய்வு பெற்ற அரசு ஊழியரான அவன் தந்தையும், தாயாரும் டெஹ்ராடூனில் வாழ்ந்தாலும், ஒரே மகன் மீது அளவு கடந்த பாசம் அவர்களுக்கு. பெற்றோர்க்கு இதை விட மகிழ்ச்சி அளிப்பது வேறு எதுவாக இருக்கக்கூடும்? அவர்கள் தங்கள் கனவு நனவானதொரு களிப்பில் மூழ்கி இருந்தார்கள்.

பம்பாய் வந்த இருவரும் அதிர்ஷ்ட தேவதை இன்னமும் அவர்கள் பக்கம் இருப்பதையே உணர்ந்தார்கள். ஷோபாவைச் சுற்றிக் கனிகரம் மிக்க அக்கம் பக்கத்தவர்! எங்கேயோ கண் காணாப் புது ஊரில், கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போல அவள் ஒரு நிமிஷம் கூட உணராவண்ணம் அவர்கள் அவளைக் கவனித்துக் கொண்டார்கள்.

இதற்கெல்லாம் காரணம் அவளுக்கு விரைவில் விளங்கிவிட்டது; காரணம் அவளுடைய கணவன்தான். அந்த அளவுக்கு அவனைச் சுற்றி இருந்தவர்களின் அன்பையும், நன்மதிப்பையும் பெற்றிருந்தான். அவர்களோடு இரண்டறக் கலந்து அவர்களின் அன்பைச் சுவீகரித்துக் கொண்டிருந்தான். சுஷிலுடைய அன்பையோ, ஆதரவையோ, உதவியையோ அவர்கள் எல்லாரும் பெற்றிருந்தார்கள். அந்த வட்டாரத்துக் குழந்தைகள் எல்லோரும் அவனிடமிருந்து விளையாட்டுச் சாதனங்களையோ, சாக்லேட்களையோ பெற்றவர்கள் ஆனபடியால், அவன் அவர்களுடைய மனம் கவர்ந்த சுஷில் மாமா!

அண்டை அயல் வீட்டுக்காரர்களிடம் இப்படி நெருங்கிப் பழகியதே இப்போது ஷோபாவுக்கு வினையாக விடிந்தது. உரிமையோடு பழகியவர்கள், அதே உரிமையுடன், ''கல்யாணமாகி மூன்று வருஷம் ஆயிற்றே. இன்னமும் குழந்தை குட்டி இல்லையே! எங்கோ கோளாறு இருக்கிறது!'' என்று கூறத் தொடங்கிவிட்டார்கள்.

ஷோபாவுக்கு ஒரு பழைய சம்பவம் நினைவுக்கு வந்தது. அத்தை ஒருத்தி பம்பாய்க்கு வந்தாள், இவளுடன் இரண்டு நாள் தங்கி இருக்க. வந்ததும் வராததுமாகவே, 'எங்கே குழந்தை?' என்று கேட்டுக் கொண்டே வந்தாள். ஷோபாவுக்கு வெட்கம் கலந்த, 'என்ன பதில் சொல்கிறது?' என்ற குழப்பம். சுஷில் அவள் உதவிக்கு ஓடோடி வந்தான். சிரித்துக்கொண்டே, 'அத்தை! குழந்தைக்கு இப்போது என்ன அவசரம்?' என்றான். தொடர்ந்து, 'இந்தச் சுற்றுவட்டாரத்துக் குழந்தைகள் எல்லாம் எங்கள் குழந்தைகள் போலத்தான்' என்றான்.

இந்த சுஷிலின் சாதுர்யமான மழுப்பல்களுக்கு அடிமட்டத்தில் ஒரு நிழல் ஆடியது. அன்றிரவு முதல் முறையாக சுஷில் ஷோபாவிடம் சற்றுத் தீவிரமாகவே பேசினான். அத்தை சொன்னது சரிதானே என்று கேட்டான். 'சுற்று வட்டாரக் குழந்தைகளை நம் குழந்தைகள் போலப் பாவிப்பது எல்லாம் சரிதான். ஆனால் அவை நம் குழந்தைகள் இல்லை என்பதும் சரிதானே?' என்றான். அன்றே அவர்கள் முடிவு எடுத்து விட்டார்கள். 'ஆசைக்கு ஒரு பெண்ணும், நான்கு வருட இடைவெளியில் ஆஸ்திக்கு ஒரு பையனும் பெற்றுக் கொள்வோம் என்றார்கள். குழந்தை இல்லாக் குடும்பம் வெறிச்சோடிப் போனது போல் இருந்ததை நன்கு உணர்ந்தார்கள்.



இவர்கள் குழந்தையை வரவேற்கத் தயாராகி ஒரு வருஷம் ஓடியது. ஆனால் ஒரு மாறுதலும் இல்லை. அவர்கள் அன்று கண்ட கனவு நனவாகும் அறிகுறிகளையே காணவில்லை. குழந்தையின் மழலையைக் கேட்கக் காத்திருந்தவர்கள் ஏமாந்து போனார்கள். ஆசை நிராசையாகிப் பகல் கனவாகிவிடுமோ என்ற பயம் ஏற்பட்டது. இந்தச் சமயத்தில்தான் அந்தப் பேரிடி அவர்களைத் தாக்கியது. ஒரு பிரபல டாக்டர், ஷோபாவைப் பரிசோதித்துவிட்டு, 'அவள் குழந்தை பெற்றெடுக்க லாயக்கில்லாதவள். அறுவை சிகிச்சைகள் கூடப் பலனளிக்காது' என்று சொல்லிவிட்டார்.

அடுத்தநாளே இந்த 'ரகசியம்' அக்கம் பக்கத்தில் அம்பலமாகிவிட்டது. ''குழந்தையே பிறக்காதாமே! மருத்துவ ரீதியில் அந்தத் தகுதி இல்லையாமே! மலடியா! ஐயோ பாவம்,'' ''என்ன பயங்கரம்?'' என்று வட்டாரமே பேசியது.

இத்தனை வருஷங்கள் அன்பைப் பொழிந்த, உறவும் நட்பும் கொண்டாடிய மகளிரும், குழந்தைகளும் திடீர் என்று ஷோபாவைப் புறக்கணிப்பது நன்கு தெரிந்தது. பழைமையில் ஊறிய இந்தியக் குடும்பத்தினர் ஒரு மலடியை, ஒரு பாவியாகப் பாவிப்பது போலத் தன்னைப் பாவிப்பதை அறிந்தாள். வெளியே, கடை கண்ணிகளுக்குப் போகும் முன் தங்கள் குழந்தைகளை ஷோபாவின் பார்வையில் விட்டுப் போனவர்கள், இப்போது அப்படிச் செய்வதில்லை. புதுமணமான தம்பதியை அவள் வீட்டுக்குப் போவதினின்றும் தடுத்தார்கள்! அவளுடைய நிழல் பட்டாலே இவர்களுக்கும் குழந்தை பிறக்காது என்று நினைப்பது போல அவர்கள் நடந்து கொண்டதுதான் விந்தை!

இத்தனை அவமானங்களுக்கும் அசட்டைகளுக்கும் நடுவில் ஷோபாவின் கணவன் சுஷில் மட்டும், அவளுக்கு ஓர் ஆலமரம் போலப் பாதுகாப்பாக நின்றான். ''இதைஎல்லாம் மனத்தில் கொண்டு சங்கடப்

ஹிந்தியில்: ப்ரஹ்மதேவ் | ஆங்கிலவழி தமிழாக்கம்: மகரம்

படாதே என் இனியவளே!'' என்று ஆறுதல் கூறினான். ''இது உன் பிழை அன்று. இது இறைவன் சித்தம். நம் இருவருக்கும் இடையே உள்ள அன்பு மாறாமல் அப்படியே இருக்கும் போது வேறு நமக்கு எது தேவை?'' என்றான்.

**த**ங்கள் மருமகளுடைய மலட்டுத் தனம் சுஷிலின் பெற்றோர் காதுக்கு எட்டி விட்டது. மிகவும் சங்கடப்பட்டார்கள். ஆல் போல் தழைத்த அவர்கள் குடும்ப மரம் வாரிசு இல்லாமல் பட்டுப் போகப்போகிறது என்பது அவர்களைப் பெரிதும் வருத்தியது. அவமானகரமாகவும் இருந்தது. ஷோபா வின் மாமியார் டெஹ்ராடூனிலிருந்து ஒரு பெண் துணையுடன் வந்து சேர்ந்தவள் தன் பிள்ளை என்ன செய்ய வேண்டும் என்பதைக் குழப்பத்துக்கே இடம் இல்லாமல் 'மட்டைக்கு இரண்டு கீற்று' என்பது போலத் தெளி வாகவே சொல்லிவிட்டாள். சுஷிலிடம், ''நீ மறுமணம் புரிந்து கொண்டுதான் ஆகவேண் டும்'' என்றாள். சுஷிலும் தாயிடம் 'இந்த யோசனையை நான் பரிசீலிக்கக்கூடமாட் டேன்' என்று உறுதியுடன் தீர்மானமாகச் சொல்லிவிட்டான். ஷோபாவின் மனம் நோகும் எந்தக் காரியத்தையும் நான் 'செய்ய மாட்டேன்' என்று திட்டவட்டமாகச் சொல்லிவிட்டான் சுஷில்.

சுஷில் காரியாலயம் சென்றதும் ஷோபா வின் மாமியார் மருமகளுடன் பேசிப் பார்த் தாள், விளக்கங்கள் தந்தாள், விவாதித்தாள், குழந்தையே இல்லாத குடும்பத்தின் கோர முடிவுகள் பற்றிப் பயங்கரமான வர்ணனை களைத் தீட்டினாள். மறுமணம் நடந்தாலும் ஷோபா உடன் இருக்கலாம் என்றாள். சுஷில் நன்மைக்காக ஓர் இரண்டாம் மனைவி தேவைப்படுகிறது இல்லையா என்று ஷோ பாவையே கேட்டாள். நமது சாஸ்திரங் களும், புராணங்களும் இரண்டாம் திரு மணத்தை வற்புறுத்துவதாக விளக்கங்கள் தந்தாள். முதல் மனைவியை விவாகரத்து செய்தால் ஒழிய மறுதாரம் — செல்லாது என்பதை அறியாத சுஷிலின் தாய், சட்டத் தில் இதற்கு இடம் இருக்கிறது என்று ஒரு போடு போட்டாள்.

ஷோபாவின் மாமியார் அவள் காலில் விழாதகுறையாகக் கூத்தாடி ஷோபாவின் சம்மதத்தைப் பெற்றுவிட்டாள். ஷோபா வின் எதிர்ப்பு தவிடு பொடியாகிவிட்டது. ''ஆம், நீங்கள் சொல்வது சரி. அவருக்கு இரண்டாவது மனைவி தேவைதான்'' என்றாள் ஷோபா. கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும் என்ற வசனப்படி. கண வனுடைய நன்மைக்காகப் பெண்கள் எப்படி யெல்லாம் தியாகங்கள் செய்ய வேண்டி யிருக்கிறது — தங்களையே அழித்துக் கொள்வது உள்பட?

**இ**தன்பிறகு ஷோபாவே தன் கண



● ''நாங்கள் தயார் செய்யும் பிரத்தி யேக 'டிரெஸ்ஸை' அணிந்தால் நீங்கள் மற்றவரைப் பார்க்க முடியும்... ஆனால், அவர்கள் உங்களைப் பார்க்க முடி யாது.'' மேற்கண்ட கவர்ச்சியான விளம் பரத்தைப் பார்த்துப் பல இளைஞர்கள் விண்ணப்பித்தார்கள். ரூ. 500க்கு வி.பி.பி. பார்சலைப் பெற்றார்கள். உள்ளே இருந்தது ஒரு 'பர்தா'! ஏமாறு பவர்கள் இருப்பதால் ஏமாற்றுபவர்கள் பிழைக்கிறார்கள்.

(ஆதாரம்: பிஸினஸ் இந்தியா)

— எஸ். ராமன்.



## சத்ருகன் அடித்த ஜோக்!

சத்ருகன் சின்ஹா எப்போதுமே விழாக்களுக்குத் தாமதமாகத்தான் வரு வார். சமீபத்தில் காஸெட் வெளியிடும் ஒரு நிகழ்ச்சிக்குக் குறித்த காலத்தில் வந்த அவர், ''குறித்த நேரத்தில் வந்து நான் உங்களை எல்லாம் ஏமாற்றத்துக்கு உள் ளாக்கியதற்காக வருத்தம் தெரிவிக்கி றேன். இனி வழக்கம் போல நிகழ்ச்சிகளுக் குத் தாமதமாக வந்து உங்கள் எதிர்பார்ப் பைப் பூர்த்தி செய்வேன்'' என்று ஜோக் கடித்தார்!

ஆதாரம்: 'கரெண்ட்'

தகவல்: வி. ந. ஸ்ரீதரன்.

வனை இரண்டாவது திருமணத்துக்கு ஒப்புக் கொள்ள வற்புறுத்தலானாள். ஷோபா நிஜமாகவேதான் இப்படிச் சொல்கிறாள், தமாஷுக்கு அல்ல என்று கஷிலுக்குப் புரியவே ஒரு மாதம் ஆயிற்று! மேலும் ஓர் ஆண்டு ஆயிற்று அவன் அவளுடைய கருத்தை முற்றாகப் புரிந்து கொள்ள.

''நிஜமாகத்தான், 'சீரியஸ்ஸா'கத்தான் சொல்கிறாயா?'' என்று ஒரு நாள் கேட்டான்.

''முழுக்க முழுக்க நிஜம்தான். நிஜம் தவிர வேறில்லை'' என்றாள் அவள். ''நம் கதி?'' என்றான். ''அது மாறாது; மாறத் தேவையில்லை. உங்கள் குழந்தையுடன் விளையாட வேண்டும். அது வேறு ஒரு பெண்ணிடம் பிறந்ததாக இருந்தாலும்'' என்றாள்.

''சரி'' என்று அனுமதி அளித்தான்.

''இனி உங்களுக்கேற்ற மனைவியை நான் தேடிக் கொண்டே இருப்பேன். ஆனால் சம்மதம் தர வேண்டியது நீங்கள் தான்!''

அடுத்து வந்த மாதங்களில் ஷோபா கஷிலிடம் கணக்கற்ற போட்டோக்களைக் காட்டினாள். அந்தப் போட்டோக்களில் ஏதாவது குறை இருந்தால் அதை அவள் மறைக்கவில்லை. நல்ல அம்சங்கள் இருந்தால் பாராட்டவும் தவறவில்லை. தனக்கு அடங்கினவளாக இருப்பாளா என்ற அம்சத்தையும் அவள் கவனிக்கத் தவறவில்லை. தலைக்கனம் பிடித்த பெண்கள் நமக்கு எதற்கு என்பாள். பொறாமைக்காரியும் கூடாது என்பாள். நமக்கு வேண்டியதெல்லாம் உங்களுக்கு ஒரு குழந்தையைப் பெற்றுத் தருகிறவளே! அதுதானே நமக்குத் தேவை?'' என்பாள். ''அதேதான்'' என்பான் அவன்.

ஒருநாள் மூச்சிரைக்க ஓடிவந்த கஷில், ''நான் அழகிய, அடக்கமான, நாம் தேடி வந்தபடி ஒரு பெண்ணைக் கண்டு, தேர்ந்தும் எடுத்து விட்டேன்'' என்று அறிவித்ததும் ஷோபாவுக்குத் தன் உள்ளத்து உணர்ச்சிகளை உள்ளவாறு உணர அவகாசம் கிடைக்கவில்லை. ''நாளை ரகசியமாக ஒரு காரியம் நடைபெறப்போகிறது. சப்தமில்லாமல் சடங்குகளை முடித்து விட்டு நாளை இரவுக்குள் அவளை இங்கு கொண்டு வந்து விடுகிறேன்'' என்றான். ''அவள் பெயர் ராணிபாலா. நாளை இரவு அவளை வரவேற்கத் தயாராக இரு'' என்றான் கஷில்.

இன்னும் சில நிமிடங்களில் அங்கு அவளுடைய கணவனும் அவனது புதிய மனைவியும் வரப்போகிறார்கள்! இந்த எண்ணம் அவள் கண்களில் வரவழைத்த நீரைச் சுண்டி எறிந்தாள். வாசலில் ஒரு கார் வந்து நிற்கும் ஓசை கேட்டது. அடுத்த கணம் கஷில் உள்ளே வந்தான் புன்னகை பொங்கும் முகத்துடன். ''ராணி பாலாவை உனக்கு அறிமுகப்படுத்தும் இன்பத்தை எனக்களிப்பாயா?'' என்றான்.

இரண்டடி தள்ளி நின்றாள். அங்கே மிரண்ட கண்களுடன் மூன்று வயது ராணி பாலா வாயிற்படியில் நின்றிருந்தாள். ''நம் குடும்பத்தின் புது அங்கத்தினர், நம்முடைய பெண்'' என்றான் சுருக்கமாக. பிறகு ''இவளை நான் பூனாவிலுள்ள அநாதை விடுதியிலிருந்து கொண்டு வந்தேன். இவள் அழகாக இல்லை?'' ''ராணி! உன் அம்மாவைப் பார்'' என்றான்.

ஷோபாவின் கன்னங்கள் வழி கண்ணீர் உருண்டு ஓடியது. ஆனால் அதன் காரணம் இப்போது வேறு. அது ஆனந்தக் கண்ணீர். ராணிபாலாவை இரு கைகளாலும் தழுவி முத்தம் இட்டாள். கஷில் ஷோபாவைத் தட்டிக் கொடுத்துக் கொண்டே ''நம்மைப் போன்ற அதிசய, அதிர்ஷ்ட தம்பதி உலகில் வெகு சிலரே இருக்க முடியும். யாருக்குக் கிடைக்கும் இப்படிப்பட்ட ஒரு குழந்தையைப் பெண்ணாக அடையும் பாக்கியம்? சிறிது காலம் சென்றவுடன், வேண்டுமென்றால் இதே மாதிரி ஒரு பிள்ளையையும் நாம் 'பெற்றுக்கொள்ள' முடியும். நம்மை விடக் 'கொடுத்து வைத்தவர்கள்' யார் ஷோபா?'' என்றான் கஷில்.

— எஸ். சுவாமிநாதன்.

உன் உள்ளத்தைப் பண்படுத்திக் கொள். அதற்காகக் கானகம் செல்லத் தேவையில்லை. உள்ளமாகிய தனி ஆசிரமத்தில், அந்த மோனக் குடிசையில் அமர்ந்து, அற்ப ஆசைகளுக்கும், அற்ப விஷயங்களுக்கும் இடமளிக்காது உயர்ந்த சிந்தனை செய்.

— மார்க்க அரேலியர்.

***'ஆதர்ஸ் கில்ட் ஆஃப் இந்தியா'வின் சென்னைக் கிளை நடத்திய அனைத்திந்திய எழுத்தாளர்களுக்கான சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது இச்சிறுகதை. இக்கதை உள்பட, பதினாறு சிறுகதைக்ள் அடங்கிய தொகுப்பு 'சிறுகதை வழியே பாரத தரிசனம்' என்ற நூலாகப் பிரசுரிக்கப்பட்டுள்ளது. விலை ரூ. 30/-, பிரசுரம்: ஆதர்ஸ் கில்ட் ஆஃப் இந்தியாவின் சென்னைக் கிளை சார்பாக விஞ்ஞானப் பண்பாட்டுக் கழகம்.***



* ஷீக்ஹே சோப்பு விளம்பரப்படம் தயாராகிறது.

# விளம்பர யுகத்தின்<br>விந்தைகள்!

"சி.ஐ.டி. இன்ஸ்பெக்டர் சிங்காரம் பைக்கை 'கிக்' செய்து ஏறினார்; புலியெனச் சீறிப் பாய்ந்தது பைக்" என்று துப்பறியும் நாவலின் ஆசிரியர் எழுதி விடலாம். ஆனால் அந்தக் கற்பனைக்கு எப்படி சித்திர வடிவம் தருவது?

தந்தார்கள். கவாஸாகி பஜாஜ் விளம்பரத்தில் பைக் அப்படியே சிறுத்தைப் புலியாக மாறியதை டீ.வி.யில் பார்த்து ரசிக்காதவர்களே இல்லை எனலாம். இந்த விந்தையைச் சாதித்தது கம்ப்யூட்டர். 'கம்ப்யூட்டர் கிராஃபிக்ஸ்' என்ற புதிய துறையில் வல்லவரான ஷியாம் ராமண்ணா, இந்தக் 'கம்ப்யூட்டர் அனிமேஷ'னைச் செய்தார்.

இப்படி விளம்பரத் துறையில் டீ.வி. சாதனத்தை முழுமையாகவும் திறம்படவும் பயன்படுத்திக் கொள்ளப் பல நூதன உத்திகள் கையாளப்படுகின்றன. பல சமயம் டீ.வி. நிகழ்ச்சிகளை விட டீ.வி. விளம்பரமே ரசனையாக அமைவதும் உண்டு!

●● பத்திரிகை உலகிலும் இந்த விளம்பரத் துறை நூதன உத்திகளைக் கையாள விரும்புகிறது. விளம்பரப் பக்கம் என்று தனித்து இராமல் செய்திப் பக்கம் அல்லது ஒரு சிறப்பு அம்சம் இடம்பெறும் பக்கத்திலேயே விளம்பரமும் தலை நுழைக்கக் கூடுதல் தொகை தரத் தயாராயிருக்கிறது. (உ-ம்) சில பம்பாய் இதழ்களில் கோத்ரெஜ்ஜின் டொமேடோ பூரி விளம்பரத்தின் தக்காளிப் பழங்கள் ஒரு பக்கம் முழுவதும் செய்திகளினூடே உருண்டோடிக் கொண்டிருப்பதைப் பார்க்கலாம்!

●● வீடியோ படங்களிலும் விளம்பரம் புகுந்து கொண்டிருக்கிறது. மேலே சினிமா ஓடிக் கொண்டிருந்தாலும் டீ.வி. திரையின் அடிப்பாகத்தில் விளம்பரம் இடம்பெற்று வரும். இதை 'ஃபாஸ்ட் பார்வர்டு' செய்ய



* பஞ்சாபி பெண்ணுக்குத் தென்னிந்திய மணமகள் வேடம்.

முப்பது செகண்டு
ஓடக்கூடிய விளம்பரப்
படத்துக்கு மூன்று
நாட்கள் கூட ஷூட்டிங்
நடக்கும்...!
"ஒரு விளம்பர டி. வி.
துணுக்குப் படத்துக்கு
நாலு முதல் ஐந்து
லட்சம் கூடச்
செலவாகலாம்!

The
beautiful way
to get rid of
your
dandruff



**Most people think that dandruff is just an irritation on the scalp.** But it can also affect the way your hair looks. Dandruff makes it dull and lustreless.

**New Clinic Special gets rid of your dandruff gently. Gives you great looking hair.**

Its new international formulation loosens and lifts out dandruff from the scalp, where it really begins.

**And it has a rich, creamy conditioner which leaves your hair soft and shiny.** So you can use it regularly even after your dandruff's gone.

Use New Clinic Special to prevent your dandruff from coming back. And to keep your hair looking good.

KHAAS BAAT

Madhuri Dixit's dress sense was so bad that it almost defied description. It was even worse than Sridevi's or Meenakshi Seshadri's which just about says it all.

The new, improved Madhuri Dixit—as seen in D. Ramanaidu's *Jeevan Ek Sangharsh*—is therefore totally unrecognisable. Playing a sophisticated beauty queen in the film, Dixit is the epitome of chic.

It should come as no surprise then that Madhuri had to seek professional help in improving her clothes sense. And it was none other than Hemant Trivedi, ace designer and fashion consultant, who came to the rescue of the damsel in sartorial distress.

Hemant, generally averse to films and *filmi* people made an exception in Madhuri's case.

And judging by the sensational results he's achieved, there could be hope for the likes of Sridevi and Meenakshi yet.



**Madhuri Dixit: chic-er than thou**



**Shabana Azmi: relying on Kapoor's generosity**

The toothy temptress is not going to like this one bit. But the sad truth of the matter is that it is now Anil Kapoor's turn to play the benevolent benefactor to that high priestess of art cinema—Shabana Azmi. Her last release in ages, *Rakhwala*, was courtesy the hirsute charmer.

And her next release, *Amba*, is also courtesy Anil.

That's all very well. After all, such acts of kindness are what make the world—even the film world—go round.

But how come Shabana wasn't signed for Anil's home productions: *Roop Ki Rani Choron Ka Raja* or *Prem*?

Charity obviously does not begin at home for the canny Kapoor. •

NEW
Clinic
Special
ANTI-DANDRUFF SHAMPOO




What you get is dandruff-free hair
What others notice is great looking hair

* பத்திரிகையில் ஒரு சிறப்பு அம்சப் பகுதிக்குள் தலைநுழைக்கும் விளம்பரம்.

முடியாது!

●● 'லெஹர் பெப்ஸி'யை அறிமுகம் செய்யும் போது 'விலையில் தள்ளுபடி செய்து தருகிறோம்' என்று கூறி, நாளிதழில் அதற்கான கூப்பனை இணைக்கப் போக, அன்றைய நாளிதழ்கள் கூடுதல் விலையில் பிளாக் மார்க்கெட்டில் விற்ற கதை சமீபத்திய அனுபவம்!

●● பம்பாயில் இன்று பிரபலமாகி வரும் நூதன விளம்பர உத்தி, டெலி அட்வர்டைசிங். டெலிஃபோனில் உங்களை அழைத்து விளம்பர வாசகத்தை ஒருசில நொடிகளில் கூறி முடித்து விடுவார்கள். நீங்கள் பதிலுக்கு வெறுப்புக்காட்டினால் அத்துடன் விஷயம் முடிந்து போகும். ஆர்வம் காட்டினால், தொடர்ந்து கடிதங்கள், நேரடித் தொடர்பு என விளம்பர முயற்சிகள் நீளும்!

●● விளம்பரங்களுக்கு மாடல்கள் சப்ளை செய்ய இன்று தனி நிறுவனங்கள் தோன்றி விட்டன. இவர்களுக்கு 'மாடல் கோ ஆர்டினேட்டர்ஸ்' என்று பெயர். மாடல்களாக இருக்க விரும்புகிறவர்கள் இவர்களிடம் பதிவு செய்து கொண்டால், இவர்களின் புகைப்படங்களை அவ்வப்போது விளம்பர ஏஜென்ஸிகளுக்கு அனுப்பிக் கொண்டேயிருப்பார்கள். மாடல் தேர்ந்தெடுக்கப்பட்டால் இவர்களுக்குக் கமிஷன்.

●● விளம்பர நிறுவனங்கள் பல மாடல்களை 'காண்ட்ராக்ட்' போட்டு மடக்கி விடுவதும் உண்டு. பொன் விழா காணும் விண்டாஸ் இப்படித்தான் கவிதா சவுத்ரியை காண்ட்ராக்டில் வைத்திருக்கிறது. ஸர்ஃபைத் தவிர வேறு எந்த டிடர்ஜண்ட் பவுடருக்கும் இவர் மாடலாக முடியாது.

●● "ஹேர் ஆயில், சருமப் பாதுகாப்பு கிரீம் போன்றவற்றுக்கு மாடல்கள் அமைவதுதான் ரொம்பக் கஷ்டம். அழகிய வடிவமைப்பு, நீண்ட தலைமுடி, மிருதுவான சருமம் எல்லாம் ஒருங்கே அமைவது ஆயிரத்தில் ஒருவருக்குத்தான்" என்று அலுத்துக்












கொள்கிறார் ஓர் ஏஜென்ஸியின் மாடல்கள் நிர்வாகி.

●● டீ.வி. விளம்பரங்களை விளம்பரதாரரோ, விளம்பர ஏஜென்ஸியோ படம் பிடிப்பதில்லை. இவற்றை எடுக்கத் தனி நிறுவனங்கள் உள்ளன. இதிலும் ஒரு விசேஷம். ஒவ்வொரு நிறுவனமும் ஒவ்வொரு விதமான படத்தை எடுப்பதில் ஸ்பெஷலைஸ் செய்கின்றது. நகைச்சுவையாக, அவுட்டோரில், சங்கீதத்துக்கு முக்கியத்துவம் தந்து, கார்ட்டூன் – காரிகேச்சர் என்று இவை பல ரகம்.

●● சமீபத்தில் மிகப் பிரபலமாகியிருப்பது, பழைய சினிமாப் படப் பாடல்கள் மெட்டில் விளம்பரப் பாடல்களை அமைத்து அதற்கேற்பப் படம் பிடிப்பது தான்!

●● முன்பெல்லாம் பெண்களைச் சகட்டு மேனிக்கு விளம்பரத்தில் பயன்படுத்தி வந்தார்கள். ஆனால் இதனால் எதிர்மறையான பலன் கிடைப்பதை உணர்ந்து, இப்போது தேவைப்படாத இடங்களில் பெண்களைப் புகுத்துவதில்லை. அவர்களுடைய சுய கௌரவத்தை மதித்து நடந்து கொள்ள வேண்டும் என்று புரிந்து கொண்டிருக்கிறார்கள். வீட்டுக்குத் தேவையான பொருள்கள் எல்லாவற்றையும் கணித்து, பட்ஜெட் போட்டு வாங்குவது மத்தியதர, உயர்தர வகுப்புக் குடும்பங்களில் பெண்களே; அவர்களைப் பகைத்துக்கொள்வது பாதகமாக முடியும் என்பதை விளம்பரதாரர் உணர்ந்திருக்கிறார்.

●● விளம்பரத்தில் ஏதேனும் ஒரு விஷயத்தைத் திரும்பத் திரும்ப வலியுறுத்துதல் ஒரு விளம்பர யுக்தி. உதாரணமாகக் கிராம்பு எண்ணெய் பல்வேறு பற்பசைகளிலும் உண்டு. ஆனால் 'பிராமிஸ்' பற்பசை விளம்பரத்தில் இதற்குச் சிறப்பிடம் தந்து வலியுறுத்தப்படுகிறது. 'அடி மேல் அடி அடித்தால் அம்மியும் நகரும்' என்ற கதை தான்.

●● விளம்பரங்களில் நிறங்கள் முக்கிய பங்கு வகிக்கின்றன என்றால் ஆச்சரியமாயிருக்கும். ஆனால் இது உண்மை. சூரிய காந்தி எண்ணெய் விளம்பரம் என்றால், டீவி படம் முழுவதும் மஞ்சளுக்கே பிரதான இடம். ஹமாம் ஹமாம் இளம் பச்சை வலியுறுத்தப்படும். இதற்காகச் சமையல் பாத்திரத்துக்குக் கூட மஞ்சள் வர்ணம் பூசிப் படம் பிடித்ததுண்டு! பத்திரிகைகளிலும் இன்று வண்ண விளம்பரங்கள் சகஜமாகி விட்டதால் இதில் விசேஷ கவனம் செலுத்தப்படுகிறது. ஸர்ப் விளம்பரத்தில் வெள்ளை நிறத்துக்கு முக்கியத்துவம் தரப்படுவதும் அடுத்தபடியாக நீல நிறம் வலியுறுத்தப்படுவதும் நாம் அறிந்தது தானே! காரணத்தை ஊகிப்பது கஷ்டமா என்ன?

●● டீ.வி. ஷூட்டிக் என்பது, பலர்

## சிரிக்க வையுங்கள்: சிங்கப்பூர் செல்லுங்கள்!

கீழே உள்ள இடத்தில் பால்பாயிண்ட் பேனா வால் ஒரு ஜோக் அல்லது ஓர் அனுபவச் சிரிப்புத் துணுக்கு எழுதி நிரப்பி அனுப்புங்கள். பிரசுர மானால் ரூ. 25 பரிசு. அடுத்த ஆகஸ்டு இறுதிக் குள் யாருடைய ஜோக்/துணுக்குகள் மிக அதிக மாகப் பிரசுரமாகிறதோ, அவர் ஜோடியாக சிங்கப்பூர் போகலாம் — செலவின்றி! திரும்பி வந்து பேட்டி தரலாம். உறை மீது, "சிரிப்பு — சிங்கப்பூர்" என்று குறிப்பிடவும். முடிவு தேதி: 24.9.90.

ஜோக்/துணுக்கு:

என் பெயர்: ......................

விலாசம்: ......................

......................

......................

......................

......................

**கல்கி பொன்விழா பரிசுத் திட்டம்**



எண்ணுவதற்கு மாறாக, மிகவும் அலுப்பான விஷயம். முப்பது செகண்டு ஓடக் கூடிய விளம்பரத்துக்குத் தொடர்ந்து இரண்டு நாட்கள் கூட ஷூட்டிங் நடக்கும்! சினிமாவை விடவும் இது ரொம்ப கஷ்ட மான விஷயம். காரணம், முப்பதே வினாடி களில் கணிசமான பாதிப்பைப் பார்ப்பவர் உள்ளத்தில் ஏற்படுத்த வேண்டுமே!

●● விளம்பரப் படங்கள் சிலவற்றுக்குச் செலவு எக்கச்சக்கமாக ஆகும். 'முப்பது செகண்டு படம்தானே என்ன பிரமாத செலவு?' என்று நமக்குத் தோன்றலாம். ஆனால் கிரிக்கெட்டை அடிப்படையாக வைத்து விளம்பரப் படம் எடுப்பதாக வைத்துக் கொண்டால், பிராபோர்ன் ஸ்டேடியத்தில் அதை எடுக்க வாடகையே ரூ.25,000 தர வேண்டியிருக்கும்! ஆக, மொத்தச் செலவு ஒரு விளம்பர டீவி துணுக்குப் படத்துக்கு நாலு முதல் ஐந்து லட்சம் கூட ஆகலாம்!

●● அவுட்டோர் ஷூட்டிங்கும் உண்டு. 'உஜ்வாலா யூரியா' உர விளம்பரத்துக்கு ஆந்திரப் பிரதேசத்தில் உள்ள பசுமையான குச்சிப்பூடி கிராமத்தைத் தேர்ந்தெடுத்தனர். பஞ்சாபி மாடல்களைத் தென்னிந்திய மணமக்களாக்கித் திருமண சீனை எடுத்தனர். இதற்குக் கிராம மக்கள் ரொம்பச் சந்தோஷத்துடன் பூரண ஒத்துழைப்புத் தந்தனர். தெருவை அடைத்துக் கோலம் போட்டனர். பம்பாயாக இருந்தால் புள்ளிக் கோலத்தின் ஒவ்வொரு புள்ளிக்கும் நூறு ரூபாய் தர வேண்டியிருந்திருக்கும்!

●● பொதுவாகவே இன்று விளம்பரத் துறையில் பெண்களின் ஆதிக்கம்தான் அதிகம். மாடல்கள், புரொட்யூசர்கள், டைரக்டர்கள், காப்பி ரைட்டர்கள், பட்ஜெட் தயாரிப்பவர்கள், ரிலீஸ் ஆர்டர் தருபவர்கள் என்று சகலத்திலும் பெண்களே அதிகம் காணப்படுகின்றனர்.

●● டீவி விளம்பரத்தை முதலில் ஆங்கிலம் அல்லது ஹிந்தியில் படம் பிடித்துப் பிறகு பல்வேறு மொழிகளில் 'டப்' செய்கிறார்கள். முன்பெல்லாம் மாடல்கள் ஹிந்தியில் உதட்டசைக்க, பின்னணியில் தமிழோ தெலுங்கோ ஒலிக்கும். இன்று அப்படி இல்லை. 'லலிதா ஜி'க்குப் பதினாலு இந்திய மொழிகளில் டேப் தயார் செய்து தரப்பட்டது. அவர் அவற்றைக் கேட்டுப் பழகி, சரியான உச்சரிப்புடன் பதினாலு வகை உதட்டசைவுகள் கொடுக்க, பதினாலு படங்கள் தயாராயின!

தகவல்கள் உதவி: **லிண்டாஸ் லலித்; லீரிஸ் அட்வர்டைசிங் சுஜாதா.**

தொகுப்பு: **ஜெயஸ்ரீ ராஜ்.**

# சிவகாமியின் சபதம்

பதின்மூன்றாம் அத்தியாயம்

## அமர சிருஷ்டி

புத்த பிக்ஷுவின் குரலைக் கேட்டதும் திரும்பிப் பார்த்த ஆயனர், விரைந்தெழுந்து, "வாருங்கள்! அடிகளே! வாருங்கள்!" என்று கூறிக் கொண்டே வாசற்படியண்டை சென்றார்.

சிவகாமி அவசரமாக எழுந்து அருகிலிருந்த தூணைப் பிடித்துக் கொண்டு நின்றாள்.

உள்ளே பிரவேசித்த பிக்ஷு நாலாபுறமும் சுற்றிப் பார்த்து விட்டு "ஆயனரே! நான் சென்ற தடவை வந்து போன பின்னர், புதிய சிலைகள் செய்திருக்கிறீர்களோ?" என்றார்.

"ஆம், சுவாமி! அப்புறம் பன்னிரண்டு ஹஸ்த வகைகளை அமைத்திருக்கிறேன். இதோ பாருங்கள்! இந்தச் சிலைகளெல்லாம் புதியவை!" என்றார் ஆயனர்.

பிக்ஷு ஆயனர் காட்டிய சிலைகளைக் கண்ணோட்டமாய்ப் பார்த்து விட்டு, தூணைப் பிடித்துக் கொண்டு நின்ற சிவகாமியை நோக்கியபடி, "அதோ அந்தத் தூணின் அருகில் நிற்பதும் சிலைதானோ?" என்று வினவினார். அப்போது புத்த பிக்ஷுவின் கடூர முகத்தில் தோன்றிய புன்னகை அந்த முகத்தின் விகாரத்தை அதிகமாக்கிற்று.

ஆயனர் சிரித்துக் கொண்டே, "இல்லை சுவாமி! அவள் என் பெண் சிவகாமி!.... குழந்தாய்! இதோ நாகநந்தி அடிகள் வந்திருக்கிறார், பார்! பிக்ஷுவுக்கு வந்தனம் செய்!" என்றார்.

சிவகாமி அச் சமயம், நாகநந்திக்குப் பின்னால் வந்த இளைஞனைக் கடைக் கண்ணால் பார்த்துக் கொண்டிருந்தாள். ஆயனர் கூறியதைக் கேட்டதும் பிக்ஷுவின் பக்கம் திரும்பி நமஸ்கரித்தாள்.

பிக்ஷுவுடன் உள்ளே பிரவேசித்த பரஞ்சோதி அந்தச் சிற்ப மண்டபத்தில் நாலாபுறமும் காணப்பட்ட அதிசயங்களைப் பார்த்த வண்ணம் வாசற்படிக்கு அருகிலேயே பிரமித்துப் போய் நின்றான். அம்மாதிரியான அபூர்வ வேலைப்பாடமைந்த சிற்பங்களையும் சித்திரங்களையும் அவன் அதற்கு முன்னால் பார்த்ததே இல்லை.

இடையிடையே அவன் ஆயனர், சிவகாமி இவர்களையும் கவனித்தான். அன்று பல்லக்கில் அமர்ந்திருந்தவர்கள் — மத யானையின் கோபத்திலிருந்து தன்னால் காப்பாற்றப்பட்டவர்கள் — அவர்கள்தான் என்பதைத் தெரிந்து கொண்டான்.

புத்த பிக்ஷுவை ஆர்வத்துடன் வரவேற்று அவருடன் பேசிக் கொண்டே சென்ற ஆயனர் பரஞ்சோதியைக் கவனிக்கவே இல்லை; அவனைத் திரும்பிப் பார்க்கக் கூட இல்லை.

ஆனால், தூணருகில் நின்ற அவருடைய மகள் அவ்வப்போது தன்னைக் கடைக் கண்ணால் கவனிப்பதைப் பரஞ்சோதி தெரிந்து கொண்டான். நடனத்துக்குரிய ஆடை ஆபரணங்களை அணிந்து நின்ற சிவகாமியின் நவ யௌவன சௌந்தர்யத்தின் ஒளி பரஞ்சோதியின் கண்களைக் கூசச்

அமரர் கல்கி



"ஏன் சார், நான் கடன் கேட்டப்போ இல்லைன்னு சொல்லிட்டுப் பரமசிவத்துக்கு மட்டும் உடனே குடுத்திருக்கீங்களே. இது என்ன சார் நியாயம்?"

"இதோ பாருப்பா... நீ சம்பளம் வாங்கித் திருப்பித் தர்றதாச் சொன்னே; அதுக்கு இன்னும் 25 நாள் கிடக்கு. ஆனா பரமசிவம், லஞ்சம் வாங்கித் தந்துடறதாச் சொன்னான்; எனக்கு உடனே திரும்பக் கிடைச்சுடுமே!"

— வி. ரேவதி.

செய்தது.

கிராமாந்திரத்தில் பிறந்து வளர்ந்தவனும், இயற்கையில் சங்கோசமுடையவனும், தாயைத் தவிர வேறு பெண்களுடன் பழகி அறியாதவனுமான பரஞ்சோதியினால் சிவகாமியின் முகத்தை ஏறிட்டுப் பார்க்க முடியவில்லை. அதிலும், சிவகாமி தன்னைக் கவனிக்கிறாள் என்பதை அவன் அறிந்த பின்னர், அவர்கள் இருந்த பக்கமே திரும்பாமல் எதிர்ப்புறக் கூடத்தில் காணப்பட்ட சிலைகளைப் பார்த்த வண்ணம் நின்று கொண்டிருந்தான். அந்தச் சிலைகளின் தோற்றத்திலும், முக பாவத்திலும் ஏதோ ஓர் அதிசயம் இருப்பதாக அவனுக்குத் தோன்றியது. அந்த அதிசயம் இன்னதென்பது மின்வெட்டைப் போல் அவன் உள்ளத்தில் உதித்தது. ஆ! இந்தச் சிலைகள் எல்லாம் தூணருகில் நின்று தன்னைக் கடைக்கண்ணால் பார்த்துக் கொண்டிருக்கும் பெண்ணின் பல்வேறு தோற்றங்கள் தாம்! இந்த உண்மையை அவன் உள்ளம் கண்டதும், சிவகாமியினிடம் அவனுக்குத் தெய்வங்களிடம் உண்டாவது போன்ற பய பக்தி உண்டாயிற்று.

சிவகாமி புத்த பிக்ஷுவை நமஸ்கரித்த போது அவர் ஆர்வம் ததும்பிய விழிகளால் அவளை விழுங்குபவர் போல் பார்த்து விட்டு "புத்த தேவர் அருளால் உன் கோரிக்கை நிறைவேறட்டும், அம்மா! புத்த பிக்ஷுணி ஆக விரும்புவதாகச் சற்று முன்னால் நீதானே சொல்லிக் கொண்டிருந்தாய்?" என்றார்.

இந்த ஆசி மொழியானது சிவகாமிக்கு அருவருப்பை உண்டாக்கியது என்று அவள் முகபாவத்தில் தெரிந்தது. ஆயனருக்கும் அது பிடிக்கவில்லையென்பது அவருடைய வார்த்தைகளில் வெளியாயிற்று.

"அடிகளே! குழந்தை ஏதோ வேடிக்கையாகச் சொல்லிக் கொண்டிருந்தாள். நாலு நாளைக்கு முன்னால் காஞ்சியில் சிவகாமியின் அரங்கேற்றம் நடந்தது. ஆகா! தாங்கள் அதற்கு இல்லாமல் போய் விட்டீர்களே!" என்றார் ஆயனர்.

"எல்லாம் கேள்விப்பட்டேன். அரங்கேற்றம், அதற்குப் பின்னால் நடந்தவை எல்லாம் அறிந்து கொண்டேன். உங்களுக்குப் பெரிய ஆபத்து வந்ததாமே? மதயானையின் கோபத்துக்குத் தப்பினீர்களாமே!" என்றார் பிக்ஷு.

"ஆம், சுவாமி! ஏதோ தெய்வத்தின் அருள் இருந்தபடியால் தப்பிப் பிழைத்தோம்... தங்களுக்குச் சாவகாசம்தானே? இன்று பிக்ஷை இங்கேயே வைத்துக் கொள்ள வேண்டும்" என்று கூறி, ஆயனர், பிக்ஷுவின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார்.

"ஆகா! எனக்குச் சாவகாசந்தான். இன்றைக்குத் தங்கள் கிருஹத்திலே பிக்ஷை என்று எண்ணிக் கொண்டுதான் வந்தேன். தங்களுக்கு அதிகச் சிரமம் இல்லாவிட்டால்....?" என்று பிக்ஷு கூறுவதற்குள் "சிரமமா? என்னுடைய பாக்கியம்!" என்றார் ஆயனர்.

முற்றத்தில் கிடந்த இரண்டு பெரிய கற்களில் இருவரும் எதிர் எதிராக அமர்ந்தார்கள்.

"அம்மா, சிவகாமி! நீயும் உட்காரலாமே? அடிகளுக்குக் கலைகளில் அபார பிரேமை, தெரியுமோ, இல்லையோ?" என்று ஆயனர் கூறி விட்டு, பிக்ஷுவைப் பார்த்துச் சற்று மெதுவான குரலில், "அடிகளே! அஜந்தா சித்திரங்களைப் பற்றி ஏதாவது தகவல் வந்ததா?" என்று கேட்டார். அப்போது அவருடைய முகத்தில் அளவிடக் கூடாத ஆர்வம் தோன்றியது.

ஆயனர் உட்காரச் சொல்லியும் சிவகாமி உட்காரவில்லை. தூணைப் பிடித்துக் கொண்டே நின்றாள். அவளுடைய கவனம் இவர்களுடைய பேச்சில் இருந்தபோதிலும், இடையிடையே கண்கள் பரஞ்சோதியையும் கவனித்தன.

புத்த பிக்ஷு ஆயனரின் கேள்விகளுக்கு மறுமொழி சொல்லாமல், "ஆயனரே! தெய்வத்தின் சிருஷ்டியைக் காட்டிலும் தங்களுடைய சிருஷ்டியே மேல் என்று எனக்குத் தோன்றுகிறது!" என்றார்.

"சுவாமி...." என்று ஆயனர் மறுமொழி சொல்ல ஆரம்பித்த போது, பிக்ஷு அதற்கு இடங்கொடாமல் தொடர்ந்து சொன்னார்: "நான் முகஸ்துதி செய்யவில்லை,

ஆயனரே! உண்மையைச் சொல்லுகிறேன். தெய்வத்தின் சிருஷ்டி அழிந்து போகக் கூடியது. இந்த மனித உடம்புக்கு நூறு வயதுக்கு மேல் கிடையாது. நரை, திரை, மூப்புத் துன்பங்கள் மனித தேகத்துக்கு உண்டு. ஆனால், நீர் அமைத்திருக்கிறீரே, இந்த அற்புதச் சிலைகள், இவற்றுக்கு அழிவே இல்லையல்லவா? நரை, திரை, மூப்புத்துன்பம் இந்தச் சிலைகளை அணுகாவல்லவா? கல்லால் அமைந்த இந்தச் சிலைகளில் விளங்கும் ஜீவகளை ஆயிரம் ஆயிரம் வருஷங்கள் ஆனபோதிலும் மங்காமல் பிரகாசிக்குமல்லவா? உம்முடைய சிருஷ்டி தெய்வ சிருஷ்டியைக் காட்டிலும் மேல் என்பதில் சந்தேகம் என்ன?''



தையெல்லாம் கேட்ட ஆயன சிற்பியின் முகத்தில் கலை ஞானத்தின் கர்வம் தாண்டவமாடியது.

''அடிகளே! தாங்கள் சொல்லும் பெருமையெல்லாம் சிவகாமிக்கே சேரும். நடனக் கலையில் அவள் இவ்வளவு அற்புதத் தேர்ச்சி அடைந்திராவிட்டால், இந்தச் சிலை வடிவங்களை நான் எப்படி அமைத்திருக்க முடியும்?..... ஆஹா! குழந்தையின் அரங்கேற்றத்துக்கு நீங்கள் இல்லாமல் போய் விட்டீர்களே! ருத்ராச்சாரியார் பிரமித்து ஸ்தம்பித்து நின்று விட்டார். அன்றைக்கு இரண்டு பேர் இல்லாமற் போனதாலேதான் எனக்கு வருத்தம். தாங்களும் இல்லை; நாவுக்கரசர் பெருமானும் இல்லை.....''

''ஆமாம், ஆமாம்! ஆயனரே! நாவுக்கரசர் சிவகாமியின் அரங்கேற்றத்தின் போது இருந்திருந்தால் ரொம்பவும் குதூகலமடைந்திருப்பார். முக்கியமாக, சக்கரவர்த்தியின் 'மத்த விலாச'த்திலிருந்து எடுத்து அபிநயம் செய்த கட்டத்தை ரொம்பவும் ரஸித்திருப்பார் நாவுக்கரசர். மதுபானம் செய்த புத்த பிக்ஷுவும் காபாலிகனும் சண்டையிட்ட இடம் வெகு ரஸமாக இருந்திருக்குமே?''

ஆயனரின் முகம் சிறிது சுருங்கிற்று. ''சுவாமி! ஹாஸ்ய ரஸத்தைக் காட்டுவதற்காக அந்த விஷயத்தைச் சிவகாமி எடுத்துக் கொண்டாள். மற்றபடி அவளுக்கு மகான்களாகிய புத்த பிக்ஷுக்களைப் பரிகசிக்கும் எண்ணம் கொஞ்சமும் இல்லை!'' என்றார்.

ம

கா ரஸிகரும் சகல கலைகளிலும் வல்லவருமான மகேந்திரவர்ம சக்கரவர்த்தி ஜைனராயிருந்த போது, 'மத்த விலாஸம்' என்னும் ஹாஸ்ய நாடகத்தை இயற்றியிருந்தார். அதில் காபாலிகர்களும் புத்த பிக்ஷுக்களும் பெருங் கேலிக்கு உள்ளாக்கப்பட்டிருந்தார்கள். அந்த நாடகத்தில் ஒரு பகுதியைச் சிவகாமி அபிநயத்துக்கு விஷயமாக எடுத்துக் கொண்டிருந்தாள். அதைக் குறித்துத்தான் மேற்கண்ட பேச்சு நடந்தது. பின்னர் பிக்ஷு சொன்னார்:

''வாஸ்தவந்தான்; ஹாஸ்ய ரஸத்தை அபிநயித்துக் காட்ட மிகவும் பொருத்தமான சம்பவம். காபாலிகன் புத்த பிக்ஷுவின் தலைக் குடுமியைப் பிடிக்கப் பார்த்து, மொட்டைத் தலையைத் தடவி விட்டுக் கீழே விழும் கட்டத்தில் ஹாஸ்ய ரஸம் ததும்பியிருக்கும்! ஆனால், சபையோர் சிரித்து முடிவதற்குள்ளே ஏதோ யுத்தத்தைப் பற்றிய செய்தி வந்து, சக்கரவர்த்தி எழுந்து போய் விட்டாராமே? சபையும் கலைந்து விட்டதாமே?....''

''ஆமாம், ஆமாம்! அதுதான் சற்று மனக் கிலேசத்தை அளித்தது. அதனாலேயே சிவகாமி கூட நாலு நாளாக உற்சாகமில்லாமல் இருந்தாள். அரங்கேற்றத்துக்குப் பிறகு இன்றைக்குத்தான் மறுபடியும் காலில் சதங்கை கட்டிக் கொண்டாள். அடிகளே, யுத்தம் எதற்காக வருகிறது? எதற்காக ஜனங்கள் ஒருவரையொருவர் கொன்று கொண்டு சாக வேண்டும்?'' என்றார் ஆயனர்.

''ஆயனரே! அந்தக் கேள்வியை ஏழை பிக்ஷுவாகிய என்னிடம் கேட்டு என்ன பிரயோஜனம்? உலகத்திலுள்ள திரிபுவன சக்கரவர்த்திகளையும், குமார சக்கரவர்த்திகளையும், மகாராஜாக்களையும் யுவராஜாக்களையும், சிற்றரசர்களையும் படைத் தலைவர்களையும் கேட்க வேண்டும். கொலையும் கொடூரமும் நிறைந்த இந்த உலகத்தில் புத்த பகவான் அவதரித்து அன்பு மதத்தைப் பரப்பினார். அதற்காகப் பிக்ஷுக்களின் சங்கத்தையும் ஸ்தாபித்தார். அந்தப் புத்த பிக்ஷுக்களை ராஜ சபைகளில் பரிகசித்துச் சிரிக்கும் காலம் இது! யுத்தம் ஏன் வருகிறது என்று என்னைக் கேட்டு என்ன பயன்?''

அந்தப் பொல்லாத புத்த பிக்ஷுவிடம், பேச்சு யுத்தத்தில் அகப்பட்டுக் கொண்டு தன் தந்தை திணறுவதைச் சிவகாமி அறிந்தாள். அவளுடைய கண்களில் கோபக் கனல் வீசிற்று. அவள், ''அப்பா! புத்த பகவான் அன்பு மதத்தையும் அஹிம்சா தர்மத்தையும் உபதேசித்தது உண்மைதான். ஆனால் இந்தக் காலத்தில் அந்தப் புத்த பகவானுடைய பெயரைச் சொல்லிக் கொண்டு போலி பிக்ஷுக்கள் தோன்றி, மக்களை வஞ்சித்து ஏமாற்றி வருகிறார்கள். அதனால்தான் யுத்தம் முதலிய விபரீதங்கள் வருகின்றன!'' என்றாள்.

ஆயனருக்கு, 'இதேதடா வம்பு?' என்று தோன்றியது. அங்கிருந்து சிவகாமியை எப்படியாவது அனுப்பி விட எண்ணி, அவளை இரக்கம் தோன்றப் பார்த்து, "குழந்தாய், சிவகாமி! நீ வேணுமானால் உள்ளே அத்தையிடம் போய்..." என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தார்.

அதற்குள் நாகநந்தி, "ஆயனரே! நான் தோற்றேன். சிவகாமி மிகவும் புத்திசாலி! அவள் சொல்லியதில் ரொம்பவும் உண்மை இருக்கிறது!" என்றார். அவருடைய கடூர முகத்தில் மறுபடியும் ஒரு கண நேரம் விசித்திரமான புன்னகை காணப்பட்டது.

பேச்சை வேறுவழியில் திருப்பியாக வேண்டுமென்று ஆயனர் கருதிச் சுற்று முற்றும் பார்த்தார். அப்போது அவருடைய பார்வை அம் மண்டபத்தின் இன்னொரு பக்கத்தில் சிலைகளையும் சித்திரங்களையும் பார்த்துக் கொண்டு நின்ற பரஞ்சோதியின் மேல் விழுந்தது.

"சுவாமி! அந்தப் பிள்ளை யார்? உங்களுடைய சீடனா?" என்று கேட்டார் ஆயனர்.

பதினாலாம் அத்தியாயம்

## தாமரைக் குளம்

தன்னைப் பற்றிப் பேசுகிறார்கள் என்பது காதில் விழுந்ததும் பரஞ்சோதி அவர்கள் இருந்த பக்கம் திரும்பிப் பார்த்தான்.

அதே சமயத்தில் புத்த பிக்ஷு, "என்னுடைய சீடன் இல்லை, ஆயனரே! தங்களுடைய சீடனாகப் போகிறவன். பரஞ்சோதி! இங்கே வா!" என்றார்.

பரஞ்சோதி அவர்களருகில் நெருங்கி வந்தான்.

அப்போதுதான் அவனை நன்றாகக் கவனித்த ஆயனர் வியப்புடன், "யார் இந்தப் பிள்ளை? எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கிறது?" என்றார்.

"அப்பா! உங்களுக்குத் தெரியவில்லையா? அன்றைய தினம் மத யானையின் மேல் வேலை எறிந்தாரே, அவர்தான்!" என்று உற்சாகத்துடன் கூறினாள் சிவகாமி.

பரஞ்சோதி நன்றியறிதலுடன் சிவகாமியை ஒரு கணம் ஏறிட்டுப் பார்த்தான்.

ஆயனரின் முகத்தில் ஆச்சரியமும் ஆர்வமும் பொங்கின.



"என்ன? என்ன? அந்த வீர வாலிபனா இவன்? என்ன லாகவமாய் வேலை எறிந்தான் — மாமல்லர்கூட அதிசயிக்கும்படி! இவனுக்கு எந்த ஊர்? இத்தனை நாளும் எங்கே இருந்தான்? தங்களை எப்போது சந்தித்தான்...?" என்று சரமாரியாக ஆயனர் கேள்விகளை அடுக்கினார். சாதாரணமாக, ஆயனர் தாம் ஈடுபட்டுள்ள கலைகளின் விஷயத்திலே தவிர, வேறெதிலும் இவ்வளவு ஆர்வம் காட்டிப் பேசுவதில்லை.

"சித்தர்வாச மலைக்குப் போய் விட்டுத் திரும்பும் போது இந்தப் பிள்ளையை வழியில் பார்த்தேன்...." என்று பிக்ஷு ஆரம்பிப்பதற்குள்ளே ஆயனர் பரஞ்சோதியை மறந்து விட்டார்.

"ஆஹா, அடிகள் சித்தர் மலைக்கா போயிருந்தீர்கள்? அங்கேயுள்ள சித்திர அதிசயங்களைப் பார்த்தீர்களா?" என்றார்.

"பார்த்தேன், ஆயனரே! அதைப் பற்றி அப்புறம் சொல்லுகிறேன். நான் வரும் வழியில் சாலை ஓரத்தில் இந்தப் பிள்ளை படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தான். இவனை ஒரு பெரிய நாக சர்ப்பம் கடிக்க இருந்தது. என்னுடைய கொல்லா விரதத்தைக் கூடக் கைவிட்டு அந்த நாகத்தைக் கொன்று இவனைக் காப்பாற்றினேன்...."

"இது நல்ல வேடிக்கை! தங்கள் திருநாமம் நாகநந்தி! இவனை நாகம் தீண்டாமல் தாங்கள் காப்பாற்றினீர்கள்! இவன் எங்களை நாகம் கொல்லாமல் காப்பாற்றினான்! ஆஹா! ஆஹா!" என்று ஆயனர் சிரித்தார். நாகம் என்பது சர்ப்பத்துக்கும் யானைக்கும் பெயரானபடியால் ஆயனருக்கு மேற்படி சிலேடைப் பொருத்தம் மிக்க விநோதத்தையளித்தது.

புத்த பிக்ஷு, "இவனை நான் காப்பாற்றியதால் பல காரியங்களுக்குச் சாதகமாயிற்று. தங்களுக்கு இவன் ஓலை கொண்டு வந்திருக்கிறான்!" என்றார்.

"ஓலையா? யாரிடமிருந்து?"

"திருவெண்காட்டு நமசிவாய வைத்தியரிடமிருந்து. அவருடைய மருமகன் இவன்!"

ஆயனர் ஆர்வத்துடன் எழுந்து, "என் அருமைச் சிநேகிதரின் மருமகனா நீ? உன் பெயர் என்ன, தம்பி!" என்று கேட்டுக் கொண்டே பரஞ்சோதியைத் தழுவிக் கொண்டார். பிறகு, "ஓலை எங்கே?" என்று கேட்டார்.

பரஞ்சோதி நாகநந்தியை நோக்கினான். அவர், "ஆயனரே ஓலை காணாமல் போய் விட்டபடியால் வாலிபன் இங்கு வருவதற்கே தயங்கினான். அதற்காகவே இவனை நான் அழைத்துக் கொண்டு வந்தேன். இவனுடைய மாமன் தங்களுக்கும் நாவுக்கரசருக்கும் ஓலைகள் கொடுத்திருந்தாராம். அந்த ஓலைகளை மூட்டைக்குள் கட்டி வைத்திருந்தான். அன்றிரவு யானை மேல் வேல் எறிந்த இடத்தில் மூட்டை காணாமற் போய் விட்டது..." என்று நிறுத்தினார்.

அப்போது ஆயனர், "ஆமாம், ஆமாம்! யானை நின்ற இடத்தில் ஒரு மூட்டை கிடந்தது. அதை நான் எடுத்து வந்தேன். ஆனால், மறு நாள் கோட்டைக் காவல் தலைவர் ஆள் அனுப்பி அதை வாங்கிக் கொண்டு போய் விட்டார். போனால் போகட்டும், என் அருமை நண்பரின் மருமகன் என்று சொன்னால் போதாதா! ஓலை வேறு வேணுமா?... சிவகாமி, நம்மைப் பெரும் விபத்திலிருந்து காப்பாற்றிய வீரப் பிள்ளை இவன்தான். இவனுக்கு உன்னுடைய நன்றியைத் தெரியப்படுத்து!" என்றார்.

சிவகாமி பரஞ்சோதியைப் பார்த்த வண்ணம், "இவருக்கு நான் நன்றி செலுத்தப் போவதில்லை. இவரை யார் விதிக்குக் குறுக்கே வந்து வேலை எறியச் சொன்னது? இவர் பாட்டுக்கு இவர் காரியத்தைப் பார்த்துக் கொண்டு போவதுதானே?" என்றாள்.

சிவகாமியின் இந்தக் கடுஞ்சொல், கேட்டுக் கொண்டிருந்த மூன்று பேரையும் சிறிது திடுக்கிடச் செய்தது.

நாகநந்தி ஆயனரைப் பார்த்து, "உங்கள் குமாரிக்கு என்ன ஏதாவது உடம்பு குணமில்லையா?" என்று கேட்டார்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை, சுவாமி! அன்று அரங்கேற்றம் நடுவில் தடைப்பட்டதிலிருந்து அவளுக்கு உற்சாகக் குறைவு ஏற்பட்டிருக்கிறது. அது ஏதோ அபசகுனம் என்று நினைக்கிறாள்... சிவகாமி! நீ உன் அத்தையிடம் போய், 'அதிதிகள் வந்திருக்கிறார்கள்' என்று சொல்லு, அம்மா!" என்றார்.

"ஆகட்டும், அப்பா!" என்று சொல்லி விட்டுச் சிவகாமி அந்த வீட்டின் பின்கட்டை நோக்கிச் சென்றாள். மண்டபத்தின் பின் வாசற்படியை அவள் தாண்டிக் கொண்டிருந்த போது, புத்த க்ஷு பின்வருமாறு பரிகாசக் குரலில் சொன்னது அவள் காதில் இலேசாக விழுந்தது: "உம்முடைய குமாரியைத் தாங்கள் நன்றாகக் கவனிக்க வேண்டும், ஆயனரே! சாதாரணமாக, இளம் பெண்கள் உயிரின் மேல் வெறுப்புக் கொண்டார்கள் என்றால், அதற்குக் காரணம் காம தேவனுடைய புஷ்ப பாணங்களாகத்தான் இருக்கும் என்பது உமக்குத் தெரியாதா?"

சிவகாமி தனக்குள், "இந்தப் புத்த பிக்ஷு பொல்லாதவர்; நெஞ்சிலும் நாவிலும் நஞ்சு உடையவர்; இவருடன் அப்பாவுக்கு என்ன

சிநேகம் வேண்டிக் கிடக்கிறது?'' என்று சொல்லிக் கொண்டாள்.

இரண்டாங் கட்டுக்குள் சிவகாமி நுழைந்ததும் அங்கே 'கலகல'வென்றும் 'சடசட' வென்றும், பலவிதமான சப்தங்கள் ஏக காலத்தில் உண்டாயின.

பச்சைக் கிளிகளும் பஞ்சவர்ணக் கிளிகளும், 'அக்கா! அக்கா! என்று கூவின. நாகணவாய்ப் புட்கள் 'கிக்கி!' என்றன. புறாக்கள் 'சடசட'வென்று, சிறகுகளை அடித்துக் கொண்டன. முற்றத்துக் கூரை மேல் உட்கார்ந்திருந்த மயில் 'ஜிவ்'வென்று பறந்து தரைக்கு வந்தது. அங்கிருந்த மான் குட்டி மட்டும் சப்தம் ஒன்றும் செய்யாமல், சிவகாமியின் முகத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டு அவள் அருகில் வந்து நின்றது.

இந்தப் பட்சிகள், மிருகங்கள் எல்லாம் சிவகாமி விளையாடிப் பொழுதுபோக்குவதற்காகவும், ஆயனரின் சிற்ப — சித்திர வேலைகளுக்காகவும் இரண்டாவது கட்டில் வளர்க்கப்பட்டு வந்தன.

சிவகாமி பிரவேசித்ததும் அவை போட்ட சப்தத்தைக் கேட்டு, ''சீ! பேசாமலிருங்கள்! தலைவேதனை!'' என்று அதட்டினாள்.

உடனே அங்கு அதிசயமான நிசப்தம் உண்டாயிற்று.

சிவகாமி சுற்றும் முற்றும் பார்த்து விட்டு ''இன்றைக்கு ரதியைத்தான் அழைத்துப் போக வேண்டும். ரதிதான் சப்தம் போடாமல் வருவாள்! ரதி, வா!'' என்று கூறி விட்டு மேலே சென்ற போது, மான்குட்டி மட்டும் அவளைத் தொடர்ந்து சென்றது.

மற்றப் பட்சிகள் மௌனமாயிருந்த போதிலும், தலையைச் சாய்த்துக் கொண்டும் மற்றும் பலவிதக் கோணல்கள் செய்து கொண்டும் ரதியைப் பொறாமை ததும்பிய கண்களால் நோக்கின.

இரண்டாவது கட்டைத் தாண்டியதும், மூன்றாவது கட்டு ஒன்று இருந்தது. அது சமையல் கட்டு என்பது, அங்கு வந்த புகையினாலும், அடுப்பிலிருந்து பலவகை உண்வுப் பதார்த்தங்களின் நறுமணங்களினாலும் தெரிய வந்தது.

தாழ்வாரத்தில் நின்றபடி, ''அத்தை!'' என்று கூப்பிட்டாள் சிவகாமி.

''ஏன், குழந்தாய்?'' என்று கேட்டுக்



## அருள்வாக்கு

காயத்ரீ என்றால், ''எவர்கள் தன்னைக் கானம் பண்ணுகிறார்களோ அவர்களை ரக்ஷிப்பது'' என்பது அர்த்தம்.

காயந்தும் த்ராயதே யஸ்மாத் காயத்ரீ(இ)
த்யபிதியதே!

கானம் பண்ணுவதென்றால் இங்கே பாடுவதில்லை. பிரேமையுடனும் பக்தியுடனும் உச்சரிப்பது என்று அர்த்தம். யார் தன்னைப் பயபக்தியுடனும் பிரேமையுடனும் ஜெபம் பண்ணுகிறார்களோ, அவர்களைக் காயத்ரீ மந்திரம் ரக்ஷிக்கும். அதனால் அந்தப் பெயர் அதற்கு வந்தது. வேதத்தில் காயத்ரீயைப் பற்றிச் சொல்லும் போது,

காயத்ரீம் சந்தஸாம் மாதா

என்று இருக்கிறது. சந்தஸ் என்பது வேதம், வேத மந்திரங்களுக்கெல்லாம் தாயார் ஸ்தானம் காயத்ரீ என்று வேதமே சொல்கிறது. 24 அக்ஷரம் கொண்ட காயத்ரீ மந்திரத்தில் ஒன்றொன்றும் எட்டெழுத்துக் கொண்ட மூன்று பாதங்கள் இருக்கின்றன. அதனால் அதற்கு 'த்ரிபதா' காயத்ரீ என்றே ஒரு பெயர் இருக்கிறது. இந்த ஒவ்வொரு பாதமும் ஒவ்வொரு வேதத்தின் ஸாரம். அதாவது ரிக், யஜுஸ், ஸாமம் என்று மூன்று வேதங்களையும் இறுக்கிப் பிழிந்து கொடுத்த essence (ஸாரம்) காயத்ரீ மஹா மந்திரம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய ஸ்வாமிகள்.



ஃபிரிஜ் உள்ளவர்களுக்கு...

ஐஸ் டிரே ஃபிரீஸரிலிருந்து எடுக்க வராமல் அடிக்கடி வம்பு பண்ணும். இதைத் தவிர்க்க, ஐஸ் டிரேயில் நீர் நிரப்பி ஃப்ரீஸருக்குள் வைக்கு முன் பொடி உப்பை எடுத்து லேசாக ஃப்ரீஸருக்குள் தூவுங்கள்.. ட்ரேயை வையுங்கள். உறையட்டும். எடுத்துப் பாருங்கள். உப்பு உங்களுக்குக் கை கொடுக்கும். டிரே சுலபமாக எடுக்க வரும்.

— முத்து

கொண்டு ஒரு மூதாட்டி சமையல் அறை வாசலில் தோன்றினாள்.

"அதிதிகள் இரண்டு பேர் வந்திருக்கிறார்கள். முன்னொரு தடவை வந்தாரே கடுவன் பூனை போன்ற முகத்துடனே ஒரு புத்த பிக்ஷு அவர் வந்திருக்கிறார்" என்றாள் சிவகாமி.

"பெரியவர்களைப் பற்றி இப்படியெல்லாம் சொல்லாதே, கண்ணே – நீ எங்கே கிளம்புகிறாய், ரதியையும் அழைத்துக் கொண்டு?" என்று மூதாட்டி கேட்டாள்.

"அப்பாவும் அந்தப் புத்த பிக்ஷுவும் ஏதோ தர்க்கம் செய்து கொண்டிருக்கிறார்கள். அது முடிகிறவரையில் நான் தாமரைக் குளத்துக்குப் போய் வருகிறேன்!" என்று சொல்லி விட்டுச் சிவகாமி சமையற்கட்டைத் தாண்டிச் சென்று வீட்டின் கொல்லைப்புறத்தை அடைந்தாள்.

கொல்லைப்புறத்தில் வீட்டைச் சேர்ந்தாற் போல் மல்லிகை, முல்லை, அலரி, பாரிஜாதம், சம்பங்கி முதலிய பூஞ்செடிகளும் கொடிகளும் காணப்பட்டன. அவற்றையெல்லாம் தாண்டி மரங்களடர்ந்த வனப் பிரதேசத்துக்குள்ளே சிவகாமி பிரவேசித்தாள். அந்தக் காட்டில் நடக்கும் போது அவள் ரதியிடம் பின்வருமாறு சொல்லிக்கொண்டு போனாள்:

"என்ன; ரதி! அப்பாவுக்கு என் அரங்கேற்றத்தின் போது இரண்டே இரண்டு பேர் வரவில்லை என்றுதான் வருத்தமாம்! இந்தப் புத்த பிக்ஷு வந்து என் அரங்கேற்றத்தைப் பார்க்கவில்லையென்று வருத்தம் என்ன வந்தது?... யாருடைய பாராட்டுதலைப் பெறுவதற்காக நான் இரவு பகலாய்ப் படாதபாடுபட்டு இந்த நிருத்தியக் கலையைப் பயின்றேனோ, அவர் அன்றைக்கு வரவில்லை; இந்தப் பெரிய பல்லவ ராஜ்யத்துக்குள்ளே யார் மகாரஸிகரோ, அப்பேர்ப்பட்டவர் வரவில்லை. ஏழு வருஷங்களுக்கு முந்தி, நான் உன்னைப் போல் சிறு குழந்தையாயிருந்த காலத்தில், எவர் என்னுடன் கைகோத்து நின்று தாமும் நடனம் ஆடுவேன் என்று பிடிவாதம் பிடித்தாரோ — தமக்கும் நடனக் கலை சொல்லிக் கொடுக்கும்படி எவர் என் மோவாய்க் கட்டையைப் பிடித்துக் கொண்டு கெஞ்சினாரோ — அவர் வரவில்லை, ரதி நீயே சொல்லு! ஆண் பிள்ளைகளைப் போல் பொல்லாதவர்கள் இந்த உலகத்தில் உண்டா...?"

ரதி பாவம், சிவகாமி தன்னிடம் சொல்லிக் கொண்டு வந்த விஷயங்களின் முக்கியத்துவத்தைக் கொஞ்சமும் அறிந்து கொள்ளாமல் ஆங்காங்குத் தரையில் காணப்பட்ட அறுகம் புல்லின் நுனியைக் கடித்து மென்று கொண்டு வந்தது.

அரை நாழிகை நேரம் அவர்கள் காட்டுக்குள் நடந்து வந்த பிறகு, கொஞ்சம் இடைவெளி காணப்பட்டது. அந்த இடைவெளியில், ஓர் அழகிய தடாகம் இருந்தது. அதில் தாமரை, செங்கழுநீர், நீலோத்பலம் முதலிய மலர்கள் செழித்து வளர்ந்திருந்தன.

சிவகாமி அந்தக் குளத்தில் இறங்கி நீர்க்கரையோரமாய் நின்று தண்ணீரில் தன்னுடைய நிழலைப் பார்த்தவண்ணம் பேசினாள்:

"ரதி! இதைப் பார்! அவர் மட்டும் இனிமேல் எப்போதாவது வரட்டும்; நான் முகங்கொடுத்துப் பேசப் போவதே இல்லை! 'போதும், உம்முடைய சிநேகிதம்! போய் விட்டு வாரும்!' என்று கண்டிப்பாய்ச் சொல்லுகிறேனா, இல்லையா, பார்!" என்று சொல்லியவண்ணம், அதற்கேற்ப அபிநயம் பிடித்தாள்.

சிவகாமி குளக்கரையில் வந்து நின்ற சிறிது நேரத்துக்கெல்லாம் காட்டில் சற்றுத் தூரத்தில் ஓர் உயர்ந்த ஜாதிக் குதிரை வந்து நின்றது. அதன் மேல் வீற்றிருந்த வீரன் சப்தம் செய்யாமல் குதிரை மேலிருந்து இறங்கித் தடாகத்தை நோக்கி வந்தான்.

(தொடரும்)

# அந்தி வரும் நேரம்



தலைப்புக்கும் படத்துக்கும் சம்பந்தம் இல்லாதது போலவே ஆரம்பக் காட்சிகள் ஒன்றுக்கொன்று அவ்வளவாக ஒட்டாமல் போய் விட்டாலும் கார் விபத்துக்குள்ளாகும் மாலினி (அறிமுகம்) கோமா நிலைக்குப் போன பின், 'ஓமன்' போன்ற ஆவியுலகம் சம்பந்தப்பட்ட ஆங்கிலப் படங்களின் திகில் காட்சிகள் துணை நின்று விறுவிறுப்பைக் கூட்டுகின்றன.

உடல் அப்படியே அசையாமலிருக்கத் தலை மட்டும் தனியே 360 டிகிரிக்கு முழுமையாகச் சுற்றி நிலைப்பதும், இடுகாட்டின் ஒரு பகுதித்தரை படிப்படியாகக் கொந்தளிக்கும் சேற்றுக் குட்டையாக மாறுவதும், பரந்து விரிந்த இரட்டைக் கட்டில் சட்டென ஒரு மினி நீச்சல்குளமாக மாறி ஆவிப் பெண் அதில் நீச்சலடிக்க, கட்டிலின் கண்ணாடிப் பரப்பின் மீது படுத்தபடியே அதைப் பார்த்து ரசித்து மயங்கிப் போகும் நிழல்கள் ரவியை அவள் ஆவலோடு தழுவி உள்ளுக்குள் இழுத்துத் தண்ணீருள் அமுக்க நீர்க்குமிழிகள் கொப்புளிப்பதும் — ஏற்கெனவே பார்த்திருக்கும் விதேசிக் காட்சிகள் போலத்தான் என்றாலும் பரபரப்புக்குக் குறைவில்லை. அவற்றுக்குப் பக்கவலுவாக விளங்குவது சங்கர் — கணேஷின் பின்னணி இசை.

கோமாவில் படுத்திருக்கும் மாலினியின் ஆவி இன்னொரு பெண்ணின் உடலில் புகுந்து கொள்கிறது. தன்னை அந்நிலைக்கு ஆளாக்கிய நால்வரைப் பழிவாங்குவது அதன் நோக்கம். அவர்கள் ஒவ்வொருவராக அலற அலறக் கொலை செய்யப்பட, ஆவியின் அட்டகாசத்தை முடிவுக்குக் கொண்டு வருவது எப்படி?

வெகுஜன நன்மைக்காக மாலினியின் தாய் (கமலா காமேஷ்) மருத்துவமனையில் நினைவில்லாமல் படுத்திருக்கும் தன் மகளின் உடலில் செலுத்தப்பட்டிருக்கும் குழாய் இணைப்புக்களை (பிராண வாயு, சலைன், இரத்தம்) பிடுங்கியெறிந்து அவள் உயிரைப் போக்க, ஆவி அடங்கிப் போகிறது.

முதலில், "எப்படியாவது என் மகளின் உயிரைக் காப்பாற்றுங்கள் டாக்டர்" என்று நிழல்கள் ரவியிடம் அழுது மன்றாடும் அந்தத் தாயே முடிவில் மகளின் உயிரைப் போக்கிவிடும் உறுதிக்கு வந்துவிடும் பாத்திரப் படைப்பு கமலா காமேஷுக்கு அளவெடுத்துத் தைத்த சட்டை.

நிழல்கள் ரவி, கமலா காமேஷ் — இந்த இருவரையும் விட்டு விட்டால், படம் முழுவதும் எவ்வளவு தேடினாலும் பழக்கப்பட்ட வேறு முகங்கள் யாருமே இல்லை.

ஆவியின் அட்டகாசங்களைப் போக்கி அழித்துவிடப் பூசாரிகளையும் மதச் சின்னங்களையும் நாடிப் பயன்படுத்தாமல் மருத்துவ ரீதியில் முடிவு கண்டிருப்பது ஆறுதலான விஷயம்.

என்றாலும், இயக்குனர் இந்த ஆவியுலகச் சமாசாரங்களை இன்னும் சற்று ஆழமாக ஆராய்ந்திருக்கலாமோ என்று தோன்றுகிறது. காரணம், உயிரோடு கோமா நிலையில் இருக்கும் போதே உடலை விட்டு ஆவி வெளியேறி இப்படியெல்லாம் ஆட்டிப் படைக்கிறது என்பதை, என்னதான் இது தமிழ் சினிமாவாக இருந்தாலும் கூட, ஜீரணிக்க முடியவில்லை.

நட்சத்திரப் பட்டியலையும் அதனுடன் இணைந்திருக்கும் தமிழ் சினிமா ஃபார்முலாவையும் நம்பியிராமல் காமிராவையும் கத்தரிக்கோலையும் நம்புவதற்கு நிறையத் துணிச்சல் வேண்டும். இயக்குனர் ரமேஷ்குமாருக்கு அது நிறையவே இருக்கிறது.

அதோடு, சரி.

— சி. ஆர். கே.

"('சினிமா சிங்காரத்தின் முக பாவனையால் படத்தின் தன்மையை உணர்த்தலாமே...' என்று ஐடியா கொடுத்த வாசகர்: நெல்லை குரலோன், பொட்டல்புதூர்.)

50

ஆவி உலகை நம்பினால் பிரமிப்பு



நம்பாதவருக்கு வெறுப்பு



## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி
## ரூ.250/- ஆறுதல் பரிசு பெறும் கதை-3.

'அரசினர் ராசாசி மருத்துவமனை' என்றன எழுத்துக்கள் சோகையாய். எதிர்ச் சுவரில் தமிழனை இன உணர்வு கொள்ளச் சொல்லி, பெரிய கறுப்பு எழுத்துக்கள். பஸ் ஸ்டாப்புகளில் 'பஸ் வராதா?' என்று முதிய தலைமுறையும், 'காதல் வராதா?' என்று இளைய தலைமுறையும்.

ஆஸ்பத்திரியினுள் எல்லாம் அவசரமயமாய் இருந்தது. வெவ்வேறு மனிதர்கள். நம்பிக்கையுடன். நம்பிக்கை இல்லாமல்.



# மரணம்

சந்தோஷத்துடன். சோகமாய். சஞ்சலமாய். கனவுகள் சுமந்து. கர்ப்பங்கள் சுமந்து. மரணத்தைச் சுமந்து. அசூசையாய். இரத்தமாய். அங்கஹீனமாய். ஆண்கள். பெண்கள். குழந்தைகள். மனிதர்கள். இத்துடன், இயக்கம் நின்று போன, வெறும் பிணங்கள்!

ஆஸ்பத்திரி வாசலில் ரிக்ஷா நிற்க, இறங்கிய முனியசாமிக்கு மலைப்பாய் இருந்தது.

"சீக்கிரம்... சீக்கிரம்..." என்று அவசரப்படுத்தினான் ரிக்ஷாக்காரன்.

ரிக்ஷாவினுள் முடங்கிக் கிடந்த தன் மகனைக் குனிந்து தூக்கித் தோளில் சாய்த்துக் கொண்டான்.

வாசலுக்கு வந்தவனைத் தடுத்து நிறுத்தினான் கேட்கீப்பர்.

"புள்ளைக்கு ரொம்ப முடியலீங்க. உடனே ஆசுபத்திரியிலே சேர்க்கணும்னு எங்க ஊரு டாக்டர் எழுதிக் கொடுத்து விட்டாருங்க..." என்றான் கலங்கிய

குரலில்.

''அப்படியா? சேர்த்துடலாம். ஒண்ணும் கவலைப்படாதே.'' என்றான் கேட்—கீப்பர். ''அப்படியே மூச் செலவுக்கு ரெண்டு ரூபா கொடுத்துட்டுப் போ...''

கொடுக்கா விட்டால் திருப்பி அனுப்பி விடுவானோ என்று பயந்து, ரூபாயைத் தந்து விட்டு உள்ளே வந்தான்.

வீல்சேரைத் தள்ளி வந்த ஒருவன்,




''என்ன பண்ணுது?'' என்றான் ஏநேகமாய்.

''புள்ளைக்கு முடியலீங்க...''

''பின்னே ஏம்பா தேமேன்னு முழிச்சுக்கிட்டு நிக்கே? இதுல உட்கார வை...''

''மவராசனா இருப்பே...'' மகனை வீல் சேரில் உட்கார்த்தினான்.

பையன் மெதுவாய்க் கண் திறந்தான். ''பசிக்குதா நைனா? பெட்டுலே உன்னைச் சேர்த்துட்டுக் காப்பி ரொட்டி வாங்கியாறேன்...'' என்று கூறிய முனியசாமிக்கு இறந்து போன மனைவி 'கருப்பு'வின் ஞாபகம் வந்தது. உலகத்திலேயே தான் மட்டும் அனாதையாய் இருப்பதாய்த் தோன்ற, அழுகை வந்தது.

''அடச்சீ ... ஏய்யா இப்பவே செத்துப் போன மாதிரி அழுவுறே?'' என்றான் வீல் சேரைத் தள்ளுபவன்.

ஓ.பி. டிக்கெட் கொடுக்குமிடத்தில் வீல் சேரை நிறுத்தினான் சிப்பந்தி. ''வா.. ஓ.பி. டிக்கெட் வாங்கியாறலாம்...''

ஓ.பி. டிக்கெட் வாங்க ஹனுமன் வால் போல் வரிசை இருந்தது. ஓ.பி. டிக்கெட் தருபவனிடம், ''அண்ணே.. நமக்குத் தெரிஞ்ச கேசு. அவசரம். டிக்கட் குடு..'' என்றான் வீல்சேர்காரன்.

''பேரு என்னப்பா?''

''முனியசாமிங்க...''

''ஒம் பேரைக் கேக்கலே. புள்ளை பேரைச் சொல்லு..''

''கண்ணனுங்க..''

எழுதித் தந்த சீட்டை வாங்கிக் கொண்டு, மீண்டும் வீல்சேரைத் தள்ளினான். மூத்திர, மல வாசனையைத் தாண்டி

**சமர்ப்பணம்**

மதுரை மருத்துவக் கல்லூரியில் மருத்துவத் துறைப் பேராசிரியராய் விளங்கிய காலஞ்சென்ற டாக்டர் ஆர். எஸ். (ஆர். சுப்ரமணியம்) அவர்களுக்கு இக்கதையைச் சமர்ப்பணம் செய்கிறேன்.

— சகுபர் சாதிக்.

**சகுபர் சாதிக்**

இருபத்திரெண்டாம் நம்பர் அறைக்கருகே நிறுத்தினான்.

''இங்கேதான் காட்டணும். இந்தா, சீட்டைப் புடி...''

பிள்ளையைத் தூக்கப் போனான் முனியசாமி.

''இந்தாப்பா.. ஒரு அஞ்சு ரூபா கொடு...'' என்றான் வீல் சேர்க்காரன்.

பிடுங்காத குறையாய் வாங்கிப் போனான்.

இருபத்திரண்டாம் அறையின் உள்ளும், வெளியும் கும்பலாய் இருந்தது. உள்ளே மேஜையைச் சுற்றியிருந்த நாற்காலிகளில் டாக்டர்கள். அவர்களைச் சுற்றி நோயாளிகள்.

கண்ணன் பரிசோதனை மேஜையில் கிடத்தப்பட்டான். ஒரு டாக்டர் எழுந்து வந்து, ''என்ன பண்ணுது?'' என்றார். விழி இமையைத் தூக்கிப் பார்த்தார். தலையை ஆட்டிப்பார்த்தார். டார்ச் லைட் ஒளியைக் கண்ணுக்குள் அடித்தார். சுத்தியல் போன்ற கருவியை எடுத்து மூட்டுகளில் தட்டினார். சாவியைக் கொண்டு பாதத்தைக் கீறினார். காலைக் கையைத் தூக்கிப் பார்த்தார். ''பையனுக்கு மூளைக் காச்சல் மாதிரி தெரியுது. பெட்லே சேத்துக்கிறியாப்பா?'' என்றபடி ஓ. பி. டிக்கெட்டில் ஏதேதோ எழுதினார்.

''பையனுக்குச் சரியாயிடுமா சாமி?''

''பையனைத் தூக்கிக்கிட்டு வாங்க...'' என்று டாக்டர் அடுத்த அறைக்குப் போனார். முனியசாமி பையனைத் தூக்கிக் கொண்டு அவர் பின்னாலேயே ஓடினான்.

அடுத்த அறையில் சீஃப். டாக்டர், மாணவ மாணவிகளுக்கு வகுப்பு எடுத்துக் கொண்டிருந்தார்.

''கொஞ்ச நேரம் பையனை வச்சுக்கிட்டு இங்கேயே இருங்க. சீஃப் வகுப்பு முடிச்ச பின்னாலே, நான் வந்து அவர்கிட்டே பெட்டுலே சேர்க்கக் கையெழுத்து வாங்கித் தாரேன்...'' என்று சொல்லி விட்டுப் போனார் அந்த டாக்டர்.

சீஃப்பிடம் அட்மிஷனுக்காகக் கையெழுத்து வாங்கியபின் சாப்பாடு சீட்டு வாங்க இரண்டாம் நம்பர் அறைக்குப் போனான்.

இரண்டாம் நம்பர் அறையிலும் வரிசை இருந்தது. வரிசையில் நிற்காமலேயே சிலர் சாப்பாடு சீட்டு வாங்கிப் போனார்கள். சிலர் பணம் தந்தார்கள். சிலரிடம் பணம் கேட்டார்கள். கேட்டுத் தராதவர்களைச் 'சாவுக்கிராக்கி' என்று திட்டினார்கள். தன் முறை வந்ததும் டாக்டர் எழுதித் தந்த சீட்டை முனியசாமி காட்டினான். பெயர் விலாசம் எழுதிக் கொண்டு இன்னொரு சீட்டு தந்தார்கள்.

''இந்தா... இதைக் கொண்டு போய் நூத்திப் பன்னெண்டுலே கொடு...''

நூத்திப் பன்னிரண்டுக்குப் போகும் வழியை யாரிடம் கேட்பது...?

எதுவும் புரியாமல், பையனைத் தூக்கிக் கொண்டு இலக்கில்லாமல் நடந்தான்.

நூற்றிப் பன்னிரண்டாம் வார்டை ஒருவாறு கண்டுபிடித்ததும் 'அப்பாடா' என்றிருந்தது. வாசலில், முகத்தில் கவலையையும் கைகளில் பண்ட பாத்திரங்களையும் வைத்திருக்கும் நோயாளிகளின் உறவினர்கள். ஸிரிஞ்சுகளை ஏந்தியபடி ஹவுஸ் ஸர்ஜன்கள், நர்ஸிங் மாணவிகள்.

ஒரு மூன்று கோடு பேட்ஜ் அணிந்திருந்த நர்ஸிங் மாணவியிடம், ''பையனை பெட்டுலே சேர்க்கணுங்க...'' என்றான் முனியசாமி. சாப்பாடு சீட்டை அவளிடம் தந்தான். நோட்டுப் புத்தகத்தில் பதியப் போன அந்தப் பெண், ''ஹலோ நிம்மி...'' என்று குரல் கேட்டு நிமிர்ந்தாள். எதிரில் ஒரு ஹவுஸ் ஸர்ஜன்.

எழுதுவதை நிறுத்தி விட்டு, ''இன்னிக்கு ஏன் இவ்வளவு லேட் பாலமுருகன்?'' என்றாள்.

''ஒபியை முடிச்சுட்டு வர வேணாமா?'' என்றான். ''நேத்து எங்கே ஆளையே காணோம்?''

''ஆஃப்..''

உள்ளிருந்து, ''நிர்மலா, இங்கே வா..'' என்று ஸ்டாஃப் நர்ஸ் கூப்பிட, ''குண்டம்மாவுக்கு உடனே மூக்குலே வேர்த்துடுமே...'' என்றாள். ''சரி... அப்புறமா வர்றேன்...''

''இன்னிக்கு என்ன ட்யூட்டி? ஆன் ட்யூட்டியா, ஆஃப் ட்யூட்டியா?''

''ஆஃப் ட்யூட்டி...'' என்று சொல்லி உள்ளே போனாள்.

பின்னால் வந்த இன்னொரு ஹவுஸ் ஸர்ஜன், பாலமுருகனிடம், ''நல்லா கொக்கு சுடுறேடா..'' என்றான்.

''பையனைப் பெட்டுலே சேர்க்கணும்,'' என்றான் முனியசாமி.

''கொஞ்சம் வெய்ட் பண்ணுங்க. ஸிஸ்டர் வந்ததும் அவங்கிட்டே கொடுங்க..''

அந்த 'ஸிஸ்டர்' வந்து, சம்பிரதாய நடைமுறைகள் முடிந்து, பையனைப் படுக்கையில் கிடத்த இன்னும் அரை மணி நேரம் ஆனது.

ஓ.பி.யில் பார்த்த டாக்டர் மீண்டும் பையனைப் பரிசோதித்தார். நீளமான சீட்டில் எழுதினார். ஹவுஸ் ஸர்ஜன் ஒருவனைக் கூப்பிட்டு, ''இந்தக் கேசுக்கு எல்.பி. பண்ணணும்,'' என்றார்.

பயிற்சி டாக்டர்களில் சிலர் நோயாளிகளுக்கு ஊசி போட்டுக் கொண்டிருந்தனர்; நோயாளிகளைப் பரிசோதித்துக் கொண்டிருந்தனர்; வம்பளந்து கொண்டிருந்தனர்.

தனித்து விட்...டதும் பையன் பக்கத்தில் உட்கார்ந்தான் முனியசாமி.

''என்ன ராசா, என்ன பண்ணுது?''

''அப்பா...''

''என்னடா கண்ணு?''

முனியசாமியைச் சற்று நேரம் கூர்ந்து பார்த்தான் பையன்.

''அப்பா... எனக்காகத்தான் நீ கள்ளு, சாராயம் குடிக்கிறதை நிப்பாட்டுனியாமே...''

முனியசாமி தலையை ஆட்டினான்.

''எனக்காகத்தான் நீ ரெண்டாங் கல்யாணமே பண்ணிக்கலியாமே...?''

''இதெல்லாம் ஏம்ப்பா இப்ப கேக்குறே?''

''முழுப் பரீட்சையப்போ போன வருஷம் எனக்குக் கால் ஒடஞ்சு போனப்ப, பரீட்சை எழுதறதுக்கு என்னை நெதமும் தூக்கிட்டுப் போனில்லப்பா...''

முனியசாமிக்குக் கண்களில் நீர் கோத்தது.

''நான் பொழச்சுக்குவேனாப்பா?''

''நீ பொழச்சுக்குவே ராசா...'' என்றான். ''இப்படியே படுத்துக்க. காப்பி வாங்கியாறேன்.''

''அப்பா... எனக்குப் பல்லெல்லாம் ஊறுது.. எதையாச்சும் கடிக்கணும் போலிருக்கு...''

''ஐயையோ... எம்புள்ளே என்னென்னமோ புலம்பறானே...''

**வா**ர்டில் இருந்து விசிட்டர்கள் விரட்டப்பட்டனர். அவர்களுடன் சப்தமும். ''சீஃப் வர்றார்''

சீஃப் உள்ளே நுழைய, பவ்யமாய் அவர் பின்னால் எல்லா டாக்டர்களும்.

முதல் பெட்டுக்கு வந்தார். "**What is this case?**" என்றார்.

ஒரு எம்.டி. படிக்கும் மாணவன், "**A case of acute myocardial Infarction,**" என்றான்.

அடுத்த பெட்டுக்கு வந்தார். அடுத்த பெட். அடுத்த பெட். அப்போது அவர் பார்வை கண்ணன் மேல் பட, ''லுக்...'' என்றார்.

முனியசாமி தன் பையனுக்குக் காப்பியைப் புகட்ட முயற்சி செய்ய, அதை விழுங்க முடியாமல் . இணறிக் கொண்டிருந்தான் பையன். முகம் இருகி, கண்கள் செருகி, வேர்த்து 'வேண்டாம்' என்று தலையசைத்துக் கொண்டிருந்தான்.

''என்னையா பாத்தீங்க...?'' என்றார் சீஃப்.

ஒருவரும் பதில் சொல்லாமல் போக, ''ஹைட்ரோஃபோபியா'' என்றார். எல்லாரும் அதிர்ந்து நிற்க, ''யாருய்யா இந்த கேஸைப் பார்த்தது?''

ஒரு எம். டி. மாணவன் முன்னே வர, ''என்னய்யா கேஸ் இது?'' என்றார்.

''என்கெஃபலைடிஸ்...''



**பதினெட்டு ஆண்டுகளாக ஒருவர் ரயில்வேயில் உதவியாளராகவும், அதே சமயம் தபால் தந்தி அலுவலகத்தில் போர்ட்டராகவும் வேலை பார்த்து, இரண்டு அலுவலகங்களிலிருந்தும் சம்பளமும் வாங்கி இருக்கிறார்! அத்தனை ஆண்டுகள் சென்று அவருடைய மோசடியை ரயில்வே போர்டின் புலனாய்வுத் துறை கண்டுபிடித்தது.**

**ஆதாரம்: 'தி ஸ்டேட்ஸ்மென்'**
**தகவல்: தக்கோலம் அ. முஸ்தபா.**

"நாய் ஏதும் கடிச்சதான்னு கேட்டியா?"

"இல்லே ஸார்..."

"இதுக்காகவே உன்னை எம்.டி.யிலே மூணு தடவை ஃபெயிலாக்கலாம்.."

முனியசாமியைக் கூப்பிட்டார். "ஏம்ப்பா, நாய் எதனாச்சும் பையனைக் கொஞ்ச நாளைக்கு முன்னாடி கடிச்சுதா?"

யோசித்து, "ஆமா... சாமி.." என்றான். "ரெண்டு மாசம் முன்னாடி ஒரு நாய் கடிச்சதுன்னு பையன் சொன்னான். ரொம்ப பெரிசா ஏதும் காயமில்லே சாமி. அதுக்கு அப்பவே மந்திரிச்சுட்டேன்."

"முட்டாளே...!" என்றார். "அப்பவே தடுப்பூசி போட்டிருந்தா இந்த நெலைமை வந்திருக்காதேய்யா..."

ரேபிஸ். நாய்க்கடியால் வரும் மூளைக் காய்ச்சல். மரணம் நிச்சயம். நூற்றுக்கு நூறு சதவீதம்.

சொன்னது முழுமையாய்ப் புரியாவிட்டாலும் ஏதோ மோசம் என்கிற அளவில் புரிந்தது முனியசாமிக்கு. "எம் புள்ளைக்கு என்ன சாமி?" என்றான் அழுகையாய்.

"பையனோட அப்பாவுக்கு வெவரத்தைச் சொல்லிட்டு, பையனை 'செல்'லுக்கு மாத்திடுங்க."

சீஃப் போனபின், வார்டின் பொறுப்பு டாக்டர் முனியசாமியை உள்ளே கூப்பிட்டார். சொன்னார். "இது நாய்க்கடியால் வந்த மூளைக் காய்ச்சல். நாய்க் கடிச்ச உடனேயே ஊசி போட்டிருந்தா எந்தப் பிரச்னையும் வந்திருக்காது; ஆனா, மூளைக் காய்ச்சல் வந்துட்டா, ஒண்ணும் பண்ண முடியாது. யாரும் பொழைக்க மாட்டாங்க..."

முனியசாமிக்கு இருட்டிக் கொண்டு வந்தது. **"நான் பெத்த மகனே..." என்று** நெஞ்சிலடித்துக் கொண்டான். "எம்புள்ளே நாய் மாதிரி கொரைச்சுச் சாகப் போறானா சாமி?"

"அப்படில்லாம் இல்லே.." யோசித்து, "ரொம்பவும் கஷ்டப்பட்டுச் சாகறதை வேணும்ன்னா தடுக்க முடியும்.."

பெருங்குரலெடுத்து அழ ஆரம்பித்தான் முனியசாமி. தலையில் பளார் பளாரென அடித்துக் கொண்டான். "நீ படிச்சு என்னைக் காப்பாத்துவேன்னு நெனைச்சேன்."

"இப்படியெல்லாம் நீங்க கத்தக் கூடாது. பையன் பக்கத்திலே இப்படி அழுதா அவன் மனசு என்ன பாடுபடும்னு நெனச்சுப் பாருங்க..."

**மு**னியசாமி போனதும் மற்ற மாணவர்களையும், பயிற்சி டாக்டர்களையும் கூப்பிட்டார் வார்டின் பொறுப்பு டாக்டர். "யார் யார் அந்தப் பையனை க்ளோஸா ஹேண்டில் பண்ணுனீங்க..?"

"ஸார்.. நான்தான் அந்தப் பையனை முழுக்க எக்ஸாமின் பண்ணினேன்..."

"ஸார்.. நான்தான் இஞ்செக்ஷன் போட்டேன்..."

"டோண்ட் ஒர்ரி..." என்றார் பொறுப்பு டாக்டர். "உங்களுக்கு ஒண்ணும் ஆகாது. இருந்தாலும், அந்தப் பையனை நெருக்கமா ஹேண்டில் பண்ணினவங்கள்லாம் வேக்ஸின் போட்டுக்கங்க. அந்தப் பையனை 'செல்'லுக்கு அனுப்பறதுக்கு முன்னாடி காம்போஸ் இஞ்செக்ஷன் போட்டு அனுப்புங்க..."

**'யா**ர் பையனுக்கு ஊசி போடுவது?' என்பதில் எல்லாருக்கும் தயக்கம் இருந்தது. இருந்தபோதிலும், யாராவது போட்டாக வேண்டுமென்பதால் தவிர்ப்புகள், தயக்கங்களுக்குப் பின் பாலமுருகன் போடுவது என்று முடிவானது.

மருந்தை ஸிரிஞ்சில் எடுத்துக் கொண்டு பையனருகில் சென்றான்.

"ஸார், பக்கமா வந்துடாதீங்க.." என்றான் சிறுவன். "எனக்குக் கடிக்கணும் போல இருக்கு.."

பாலமுருகன் ஓரடி பின்வாங்கினான். பையன் சுற்று முற்றும் பார்த்தான். அருகிலிருந்த பீரோவைச் சுட்டிக்காட்டி, "ஸார்... நான் அந்த பீரோவுக்கு அடியிலே தலையை விட்டுக்கறேன். அதுக்கப்புறமா நீங்க எனக்கு ஊசி போடுங்க. கடிக்கணும்னு தோணினாக் கூட சட்டுன்னு என்னாலே தலையை வெளியே எடுக்க முடியாது..." என்று மெதுவே கட்டிலிலிருந்து இறங்கிச் சென்று தரைக்கும், பீரோவின் அடிப்புறத்திற்கும் இடையில் இருந்த சிறிய இடைவெளிக்குள் கஷ்டப்பட்டுத் தலையை உள்ளே நுழைத்துக் கொண்டான். "இந்த ஊசி போட்டா நான் பொழைச்சுப்பேனா ஸார்?"

பாலமுருகனுக்கு அழுகை வந்தது.

## 23

ஆறு மாதங்கள் ஜெட் விமானம் போல பறந்தன. இந்தக் கால இடைவேளையில் முக்கியமான பிரச்னைகள் ஒவ்வொன்றாகத் தீர்ந்தன.

வடிவேலு தாக்கல் செய்த புகாரின் மீது போலீஸ் நடவடிக்கை எடுக்க, தனமும் அவளுடைய தந்தை மயில்சாமியும் மாட்டிக் கொண்டு குற்றத்தை ஒப்புக் கொண்டார்கள். ரங்கனுக்கும் தனத்துக்கும் இனிமேல் எந்த சம்பந்தமும் இல்லை என்பதைக் கோர்ட்டே ஆணை இட உதவி செய்தார் வக்கீல்.

ரமணி தாத்தாவுடன் ரங்கனையும் உடன் வைத்துக் கொண்டு ஒரு குடியிருப்பில் இருக்க, பெற்றோர்களும் பெரியப்பா சித்தப்பாக்களும் தனித் தனியாக வாழ ஆரம்பித்தார்கள்.

ஈவு இரக்கமின்றிப் பழைய வீடு இடிக்கப் பட்டது. கட்டடக் கலைஞர் தொள்ளாயிரம் சதுர அடியில் இருபது ஃப்ளாட்டுக்கான பிளானை வரைய, ரமணி எம்.எம்.டி.ஏ. மற்றும் கார்ப்பரேஷன் அலுவலகங்களை முற்றுகை இட்டான்.

கான்ட்ராக்டர் குஞ்சிபாதத்தை ரமணிக்குப் பல ஆண்டுகளாகத் தெரியும். நல்ல மனிதர். பிறரை ஏமாற்றினால் தம்மை இன்னொருவன் ஏமாற்றுவான் என்று பயப்படுகிறவர். ரமணி அவருடைய உதவியை நாடிய போது, அவர் மறுமொழி பேசாமல் ஒப்புக் கொண்டார்.

"ரமணி நீ சாமான்களை வாங்கிக் கொடு. நான் என் ஆட்கள் படையை அழைச்சுட்டு வந்துடறேன். அஸ்திவாரம் போடற அன்னிக்கே மர வேலையும் ஆரம்பிச்சுடணும். என்னிக்கு நாள் பார்த்திருக்கே?" என்றார் குஞ்சிபாதம்.



# அதிர்ஷ்ட தேவதை

''குஞ்சு சார், மொத்தம் இருபது பிளாட் தான் கட்ட முடியும்னு எம். எம். டி. ஏ. சொல்லிட்டாங்க. இதிலே எங்க குடும்பத்துக்கே நாலு. ரெண்டை என் சிநேகிதன் புக் பண்ணி அட்வான்சா முழுத் தொகையையும் கொடுத்துட்டான். பாக்கி பதினாறு தான் வெளியாருக்கு விக்க முடியும்.''

''இப்ப நாம 1987லே இருக்கோம் ரமணி... நாளுக்கு நாள் எல்லாத்துக்கும் விலை ஏறிட்டே போறது. உலகத்திலே முளைக்க முடியாதது நிலம் ஒண்ணுதான். அதனாலே நான் என்ன சொல்றேன், ஒரு சதுர அடிக்கு நாலாயிரத்தம்பது ரூபான்னு விலையை நிர்ணயம் செய். பதினாறு ஃப்ளாட்டுக்குக் கிட்டத்தட்ட அறுபத்தஞ்சு லட்சம் வரும். இப்ப சதுர அடிக்கு இருநூறு இருநூத்துப் பத்துன்னு வாங்கறேன். மத்தவங்களை விட சீப்தான். பதினெட்டாயிரம் சதுர அடிக் கட்டடத்துக்கு இன்னிக்கெல்லாம் ஆனா எவ்வளவு ஆகும்? எல்லாச் செலவுமாகச் சேர்ந்து நாப்பது லட்சம் உன் தாத்தாவுக்கு ரொக்கமாகக் குறைஞ்சது இருபது இருபத்திரண்டு லட்சம் கிடைக்கும். என்ன? சொல்றது புரியறதா?''

''நல்லாவே புரியறது குஞ்சு சார். ஆனா யாரு விடு வாங்க முன்வருவாங்கன்னுதான் யோசனையா இருக்கு!''

''பூ. இதுக்காக் கவலைப்படறே? என் ரெண்டு பெண்களுக்கே ரெண்டு தேவைப்படறது. பாக்கிக்கு நானே நல்ல மனுஷங்களா ஏற்பாடு பண்றேன். விட்டின் மொத்த கிரயத்திலே முப்பது சதவீதம் உடனடியாக் கொடுக்கணும்னு நிபந்தனை போடு. அப்பத்தான் திடீர் திடீர்னு பணக் கஷ்டம் வராது.''

''சரி சார்!''

ரமணி நிம்மதியுடன் செயல்பட ஆரம்பித்தான்.

**ப**ல வேலைகள் அவனை நெருக்கியும் கூட, அவன் தன் வேலையை ராஜினாமா செய்யவில்லை. ரமேஷ் சாண்டில்யா அவன் மீது அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருக்கிறான். எத்தனையோ வேளைகளில் விதம் விதமான சிக்கல்கள் பிறந்திருக்கின்றன. அப்போதெல்லாம் ரமேஷும், ரமணியும்தான் கலந்தாலோசித்து பிரச்னைக்கு முடிவு காண்பார்கள். திடீரென்று அவன் வேலையை உதறி விட்டால், ரமேஷ் சிறிது காலம் திண்டாடிப் போவான். இருப்பினும் தொடர்ந்து நீடிக்கவும் அவனால் இயலாது என்று தோன்றியது. ஏன் ரமேஷிடமே இது பத்திப் பேசக் கூடாது?

அவன் முதலாளியின் அறையினுள் பிரவேசித்த போது ரமேஷ் டெலிபோனில் பேசிக் கொண்டிருந்தான். சைகையால் அவனை உட்காரச் சொல்லி விட்டு ரமேஷ் பேசிக் கொண்டே போனான்.

ரமணி யோசனை செய்தான். எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது? எப்படி முதலாளியின் மனம் நோகாமல் காரியத்தை முடித்துக் கொள்ளுவது?

திடீரென்று ரமேஷின் குரல் கேட்டது.

''என்ன ரமணி பெரிசா யோசனையில் மூழ்கியிருக்கே? என்ன விஷயம்?''

''கொஞ்ச நாளா உங்ககிட்ட என்னுடைய குழப்பத்தைச் சொல்லி அதுக்கு ஒரு தீர்வு காணணும்னு நினைச்சுட்டிருந்தேன்.''

''இன்னிக்குத்தான் வேளை வந்ததாக்கும்? அது சரி, உன் மனசு எப்பவும் கிளியரா இருக்குமே... அது எப்படிக் குழம்பலாச்சு...? ரங்கனோட ப்ராப்ளம் ஓவர். மாலுவோட ப்ராப்ளம் ஓவர்.''

''அது இன்னும் ஓவராகலே சார். அவ கழுத்திலே நான் தாலி கட்டினாத்தான் அவ ப்ராப்ளம் தீரும்.''

''கட்டாமலா இருக்கப் போறே! நானும் உங்க கலியாணத்துக்கு வராமலா இருக்கப் போறேன்!''

''நான் சொல்ல வந்தது....''

''சொல்லு...''

''நான் திடீர்னு சொல்லாம கொள்ளாம வேலையை விடறது தப்புன்னு படறது.''

''என்ன வேலையை விடப் போறியா? இப்படி ஓர் எண்ணம் வேறே உன் மனசிலே இருக்கா?''

''இப்பவே இல்லை சார்.''

''எப்பவா இருந்தா என்ன, ரமணி? நினைச்சுப் பார்த்ததே சரி இல்லே... ஆமாம், என்ன காரணம்? அதையாவது சொல்லு.''

ரமணி தன் நிலைமையை விவரமாகக் கூறினான்.

''ஸில்லி! இது ஒரு காரணமா? காண்ட்ராக்டர் குஞ்சிதபாதம் கட்டடம் கட்டிக்கிட்டிருக்கறப்ப நீ என்ன குடையைப் பிடிச்சுக்கிட்டு மேற்பார்வை செய்யப் போறியா...

பி.வி.ஆர்

பேத்தல்!''

''இல்லே சார்... மணல், சிமெண்ட், ஜல்லி....''

''தெரியும்ப்பா... இதெல்லாம் நீதான் வாங்கிக் கொடுக்கப் போறே... அதுக்காக ராஜினாமாவா? நீ எப்ப வேணும்னாலும் வா. எப்ப வேணும்னாலும் போ... இல்லே நடுவிலே போய் வர வேண்டியிருந்தாலும் பரவாயில்லே.''

''என்னாலே யாருக்கும் சிரமம் இருக்கக் கூடாது சார்... சம்பளத்தை வாங்கிக்கிட்டா அது ஜீரணமாக வேண்டாமா?''

''நீ இப்பப் போகலாம், ரமணி. உன் ராஜினாமாவை நான் ஏத்துக்க மாட்டேன். அதுக்கு இன்னொரு காரணமும் இருக்கு.''

''என்ன சார்....''

''நான் இன்னொரு ஏஜென்சிக்காகக் காத்துக்கிட்டிருக்கேன். அது கிடைக்க மூணு நாலு மாசம் ஆகும். அதுக்கு அப்புறம் என் முழு மூச்சும் அதிலே போயிடும்.. ஏன் தெரியுமா? ஆல் இண்டியாவுக்கு நான்தான் ஒரு அமெரிக்கக் கம்பெனிக்கு ஏகபோக விற்பனையாளன். நான் அதிலே மூழ்கிட்டா, இதை யார் பார்த்துப்பா?''

ரமணியால் பதில் சொல்ல முடிய வில்லை.

''நீ வெறும் குமாஸ்தாவா இருக்க மாட்டே.. இதே ரூம்லே, இப்ப நான் உட்கார்ந்திட்டிருக்கிற நாற்காலியிலே நீ உட்கார்ந்திருப்பே... லாபத்திலே உனக்கு மூணுலே ஒரு பங்கும் வரும்...''

ரமணி அயர்ந்து போனான்.

ரமேஷ் பேச்சின் திசையைத் திருப்பி னான்.

''உன் கட்டடம் எப்ப முடியும்?''

''இன்னும் எட்டு மாசத்துக்குள்ளே.''

''அதுக்கு அப்புறம் என்ன செய்வே?''

''அது பத்தி நான் இன்னும் யோசனை செய்யலே!''

''எல்லாருக்கும் வழிகாட்டற நீ, உனக்கே ஒரு வழியை வகுத்துக்க யோசனை பண்ணலையாக்கும்! ரொம்ப நல்லாத்தான் இருக்கு... அது சரி, எல்லா ஃப்ளாட்டும் வித்துப் போயாச்சா?''

''ரெண்டு பாக்கி இருக்கு சார்.''

''என்னுடைய புது ஏஜென்சி வந்துடும். எனக்கும் ரெண்டு ஃப்ளாட் தேவைப்படும்.''

''சரி சார்.''

''இன்னும் ஒரு வாரத்திலே அட்வான்ஸ் தர்றேன். வேறே யாருக்கும் அலாட் பண்ணி டாதே!''

''சரி, சார்.''

''மாலுவையும் ரிஸைன் பண்ணக் கூடாதுன்னு சொல்லிடு.''

**அ**ன்று மாலை ரமணிக்கு டெலி போன் வந்தது. அம்மா விஷயத்தைக் கூறி னாள். ரமணி பதறிப்போகவில்லை என்றா லும், கவலையில் முகம் வாடியது.

''என்ன ரமணி, யார் பேசினாங்க?'' என்று கேட்டாள், மாலு.

''அம்மா. ரங்கனுக்கு உடம்பு சரியில்லை யாம். நான் இப்பவே போகணும், மாலு.''

''நானும் வரேன்.''

''நோ... நீ உன் வேலையைக் கவனி. நான் பாஸ்கிட்டச் சொல்லிட்டுப் போறேன்.''

**நா**லரை மணிக்கு அவன் தன் வீட்டில் இருந்தான்.

அம்மா அவனுக்காகக் காத்திருந்தாள்.

''என்னம்மா ஆச்சு?''

''புதுசா ஒண்ணும் ஆகலேடா. டாக்டர் படிச்சுப் படிச்சுச் சொல்லியிருந்தார், தூசி நிறைய இருக்கிற இடத்தில ஒரு நிமிஷம் கூட நிக்கப்படாதுன்னு. இவன் ரெண்டு நாளா கட்டட வேலை நடக்கிற இடத்தில் ஆணி அடிச்ச மாதிரி நின்னிருக்கான்.''

''அப்புறம்?''

''அப்புறம் என்ன அப்புறம்? டாக்டர் திருமலைக்கு போன் பண்ணினேன். அவர் வந்தார். ரங்கனைத் தன்னோட கார்லேயே அழைச்சுட்டுப் போனார்.''

''இஸபல் ஆஸ்பத்திரிதானே?''

''ஆமாம்... இந்த ஆறு மாசத்திலே இது

---

## இரட்டைக் குரல்!



மிலன்சிங் என்ற 'பாப்' இசைப் பாட கர் ஆண் அல்ல. நீலம் பட்டோரியா என்ற பெண்தான் அப்படி ஆண் பெயரில், ஆணைப் போன்ற குரலில் பாடுகிறார். இப்படி ஆணைப் போலவும், பெண்ணைப் போலவும் மாறி மாறிப் பாடுவதில் அதுவும் பிசிறில்லாமல் பாடுவதில்தான் தமக்கு மிகவும் விருப்பம் என்கிறார் பட்டோரியா. பல இசைத் தட்டுக்கள், டேப்கள் வெளியிட்டு இருக்கி றார். இப்போது இரு குரலில் பாட சினிமா விலும் ஒப்பந்தம் ஆகியிருக்கிறது.

— 'இல்லஸ்டிரேட்டட் வீக்லி'யிலிருந்து

'சேலம் சக்திக்கொடி'

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...

நானும் வீட்டிலிருந்தபடியே
ஓய்வு நேரத்தில் விவேகானந்தா
கல்வி நிலையத்தில் ஆங்கிலம்
கற்க விரும்புகிறேன்.
எனவே பின் பக்கத்திலுள்ள
எனது முகவரிக்கு தபால்
முறைப் பயிற்சி பற்றிய
தகவல் புத்தகத்தையும்
விண்ணப்ப மனுவையும்
உடனே அனுப்பி வைக்கவும்.
இப்படிக்கு,
எஸ். செல்வ கணேசன்

WRITE PIN CODE
IN ADDRESS




விவேகானந்தா கல்வி
நிலையம்,
தபால் பெட்டி எண் 4986
9 மேட்லி ரோடு,
சென்னை
PIN 600017

ஒரு போஸ்ட் கார்டு உங்களது வாழ்க்கையில் மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தப் போகிறது என்று நாங்கள் சொன்னால் உங்களுக்கு வியப்பாகத் தோன்றலாம். ஆனால் உண்மை அது தான்!.

★ ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசி விடுவோமோ என்ற தயக்கமின்றி சரளமாகப் பேச...

★ இலக்கணப் பிழை ஏற்பட்டுவிடுமோ என்ற பயமின்றி ஆங்கிலத்தில் கடிதங்கள், கட்டுரைகள் எழுதும் ஆற்றல் பெற...

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தமிழில் தபால் மூலம் நீங்களும் இப்பயிற்சியை மேற்கொள்ளலாம்.

**"நேர்முகப் பயிற்சியும் உண்டு"**

மேலும் தகவல் அறிய ஒரு போஸ்ட் கார்டில் உங்களது விருப்பத்தை எழுதி எங்களுக்கு அனுப்பினால் போதும்!

பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும், விண்ணப்ப மனுவையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

***உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி இன்றே துவங்கட்டும்!***

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி:

## விவேகானந்தா கல்வி நிலையம்

**தபால் பெட்டி எண்: 4986, 9, மேட்லி ரோடு, தி. நகர், சென்னை-17.**

## ஹேர் ஸ்டைலுக்கு ஒரு கம்ப்யூட்டர்!



'நம் தலைக்கு எந்தவிதமான 'முடி ஸ்டைல்' பொருந்தும்?' என்று குழம்பிக் கொண்டிருப்பவர்களுக்கு உதவுவதற்காக பம்பாயில் ஒரு சலூனில் கம்ப்யூட்டர் சாதனத்தைப் பொருத்தியிருக்கிறார்கள். இந்தக் கம்ப்யூட்டர், வீடியோ காமிராவில் உங்கள் புகைப்படத்தை எடுத்து, வெவ்வேறு 'ஹேர் ஸ்டைலையும்' தலையில் பொருத்தி, திரையில் 'ஃபோகஸ்' செய்து காட்டுகிறது! இதற்கு முந்நூறிலிருந்து ஐநூறு ரூபாய் வரை கட்டணம்!

— எஸ். ராமன்.

---

மூணாவது வாட்டி.''

இரண்டு நாட்கள் தொடர்ந்து பிராண வாயுவைச் செலுத்தினார்கள். மூன்று மணி நேரத்துக்கு ஒரு தடவை ஊசி போட்டார்கள். ரங்கன் கண் திறவாமல் படுத்திருந்தான்.

மூன்றாம் நாள் தெளிவு பிறந்தது. பிராண வாயுக் குழாயை அகற்றியாகி விட்டது.

''ரமணி சார்...'' ரங்கனுடைய குரல் கேவியது.

''உணர்ச்சிவசப்படாம இரு, ரங்கா.''

''இன்னிக்கு என்ன கிழமை, ரமணி சார்?''

''வெள்ளி'' என்ற அவன், ''இனிமே நீ வேலை நடக்கற இடத்துக்குப் போகக் கூடாது, ரங்கா.''

''சரி சார்... நான் ஒண்ணு கேட்டா திட்டாம பதில் சொல்லுவீங்களா?''

''நீ எது கேட்டாலும் நான் திட்டுவேன்னு உனக்கு நினைப்பா?''

''நீங்க என்னைக் கோவிச்சுக்க மாட்டீங்கன்னு தெரியும், ரமணி சார். ஆனா என் கேள்வி முட்டாள்தனம்னு படறப்ப உங்களுக்கு எரிச்சல் வருது.''

''சரி, சொல்லு.''

''நான் ரெண்டு வீட்டுக்குப் பணம் கட்டிட்டேன் இல்லியா, ரமணி சார்?''

''ஆமாம். கட்டிட்டே... அக்ரிமெண்ட்லேயும் கையெழுத்துப் போட்டுட்டே... அதுக்கு இப்ப என்ன?''

''பணமும் பாங்க்ல என் பேர்ல இருக்கு இல்லே?''

''ஆமாம். அதுக்கென்ன?''

''எனக்கு ஏதானும் ஆயிடுச்சுன்னா.''

''சும்மாப் பேத்தாதே ரங்கா. நீ ரொம்ப நாளைக்கு உசிரோட இருப்பே.''

''அப்படி இருக்கணும்னுதான் எனக்கும் ஆசை ரமணி சார். ஆனா என்னோட ஆசை எதுவுமே இதுவரையிலே நிறைவேறினதில்லே!''

''ஏன் லாட்டரியிலே பணம் வரலையா?''

''நான் எதுக்காக நிறையப் பணம் கிடைக்கணும்னு ஆசைப்பட்டேன், ரமணி சார்! அது கிடைக்கலியே... இப்ப என் உடம்பிலே வலுவில்லே... ஆனா மனசு எதுக்கெல்லாமோ ஆசைப்படுது. எதுவும் நிறைவேறாமலே நான் போயிடுவேன்... ஆனா கடைசி ஆசைன்னு சொல்லுவாங்களே... அது இப்ப வந்துடுத்து.''

''நீ இந்த ரீதியிலேயே பேசிட்டிருந்தா, நான் இங்கிருந்து போயிடுவேன், ரங்கா... உன் கடைசி ஆசை என்னவா இருந்தாலும் அது என் காதிலே விழ வேண்டாம்.''

''சரி, ரமணி சார்.''

''இப்ப தூங்கு.''

''தூக்கம் போயிடுத்து சார்... படுத்துப் படுத்து முதுகெல்லாம் வலிக்குது.''

''உட்கார்ந்து, தலைகாணியிலே சாய்ஞ்சுக்கோ. இதமா இருக்கும்.''

ரங்கன் அவன் சொன்னபடி உட்கார்ந்து கொண்டான்.

''ரமணி சார், உயில் உயில்னு சொல்றாங்களே... சினிமாவிலே பார்த்திருக்கேன். பணக்காரக் கிழவன் எழுதுவான். சுற்றிலும் பெண்டாட்டி பிள்ளைங்க நிப்பாங்க. இல்லாமப் போனா ஒரு வக்கீல் மட்டும் இருப்பாரு. அவரு எழுதுவாரு. பணக்காரன் கையெழுத்து மட்டும் போடுவான்.''

''உனக்குத்தான் பெண்டாட்டி பிள்ளைங்க யாரும் இல்லையே... பேசாம இரு!''

''இல்லே ரமணி சார். நான் செத்துப் போயிட்டா, என் அண்ணன் வந்துடுவான்.. ஓடிப் போன தம்பி வந்துடுவான்.''

''நியாயமா அவங்கதான் வரணும்.''

''நான் உயில் எழுதிட்டா அவங்களுக்கு ஒரு பைசா கிடைக்காம வழி செய்துடலாம் இல்லியா?'' என்றான் ரங்கன்.

ரமணி எழுந்தான். மெதுவாக நகர்ந்தான்.

''என்ன சார் கோவமா?''

''ஆமாம்.''

''இனிமே நான் உயிலைப் பத்தி உங்ககிட்டப் பேச மாட்டேன் சார். இது சத்தியம்.''

நான்கு நாட்களுக்குப் பிறகு ரங்கன் வீடு திரும்பினான்.

(தொடரும்)



# கல்கி தீபாவளி மலர் 1990

**வனப்புமிக்க வண்ணத்தில் ஒளிப்படங்கள்:**

* ஆறு படை வீடு
* சிங்கப்பூர் — ஹாங்காங்
* ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் மகோற்சவம்
* இயற்கையின் எழிலில் இறைவனைக் காணலாம்!
* கேரளத்தில் ஒரு ராமர் கோயில்!

**கண்ணைக் கவரும் வண்ண ஓவியங்கள்:**

* கலைவாணியும் கவிஞர்களும்
* கிருஷ்ண லீலா தரங்கிணி
* சீர்காழி திருத்தலம்
* கவி மலர்

**வண்ணப்படங்களில் பெரியோர்கள்:**

* காஞ்சி மாமுனிவர்கள்
* முக்கூர் ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்மாச்சாரியார்

**மற்றும்:**

* கோகுலம் பக்கங்கள்
* மங்கையர் மலர்
* முதல் தரச் சிறுகதைகள்
* குறுநாவல்கள்.
* நலம் தரும் கட்டுரைகள்
* நகைச்சுவைச் சிதறல்கள்

பக்கத்துக்குப் பக்கம் சிறப்பு
வரிக்கு வரி ரசனை!

**விலை ரூ. 30/-. உடனே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளவும். அல்லது தபாலில் பெறக் கல்கி காரியாலயத்துக்கு எழுதவும். ரிஜிஸ்தர் தபால் செலவு தனி. ரூ. 8/-.**

**மானேஜர், கல்கி, சென்னை — 32.**



# ஒரு நெருக்கமான

## "இப்போது புரிகிறது, ஸ்ரீராம் சீட்டைப் பற்றி எனக்கு இதுவரை தெரிந்திருந்தது எவ்வளவு கொஞ்சம் என்று."

நாற்காலி விட்டு நகராமல், எல்லாமே தெரிந்திருப்பவர் மாதிரி அலகபவர்கள் உண்டு. அவர்களைப் போலவே சீட்டைப் பற்றி எனக்கு எல்லாமே தெரியும் என்றுதான் எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால் இப்போது எனக்குத் தெரிய வந்திருப்பதுதான் எத்தனை, எத்தனை! ஒரு நெருக்கமான சந்திப்பின் விளைவு அது. அதன் பலனாக எனக்கு ஒரு பரிசு கிடைத்தது. அது மட்டுமல்ல. கூடவே ஒரு தெளிவும் பிறந்துள்ளது.

டிவிடெண்ட் கிடைப்பதன் காரணமாக, ஒரு சந்தாதாரர் ஒவ்வொரு மாதமும் தாம் கட்ட வேண்டிய தொகையை விடக் குறைவாகவே செலுத்துகிறார் என்பது தெரிந்தபோது எவ்வளவு மகிழ்ச்சியாக இருந்தது! சீட்டு என்ற ஒன்று இல்லா விட்டால், வருங்கால வருமானங்களை ஈடு காட்டி இப்போதே ஒரு மூல தனத்தை யாரும் எப்படி உருவாக்க முடியும்? சேமிப்பவருக்கும் சரி, கடன் வாங்குபவருக்கும் சரி, பிரச்னைகளைத் தீர்த்து வைப்பது சீட்டு ஒன்றுதான். ஆரம்பத்திலேயே ஏலத்தில் சீட்டை எடுத்து விடுவதன் மூலம் கடன் வாங்குபவர் தன் பிரச்னைகளுக்குத் தீர்வுகாண்கிறார். சேமிப்பவர் சரியான தருணத்துக்குக் காத்திருந்து, அப்படிக் காத்திருக்கும் காலத்தில் அளிக்கப்படும் டிவிடெண்டுகளின் பலனையும் பெற்று, உரிய நேரத்தில் ஏலத்தில் சீட்டை எடுக்கிறார். அப்படி எடுத்த தொகையை மேலும் அதிக வருமானம் பெறும் வகையில் முதலீடு செய்கிறார். இவ்வாறு, மேலும்மேலும் பெருக்கக்கூடிய ஒரு தொடர் நடவடிக்கையை இயக்கி வைக்கிறார்.

ஸ்ரீராம் சீட்டில் 2 லட்சம் சந்தாதாரர்கள் இருக்கிறார்கள் என்பதையும், அதன் காரணமாக, திட்டமிட்டுச் செயல்படும் நிறுவனங்களின் மத்தியில் அது ஒரு மிகப் பெரிய சீட்டு நிதி நிறுவனமாக விளங்குகிறது என்பதையும் இப்போது தான் தெரிந்து கொண்டேன்.

இந்த நெருக்கமான சந்திப்புடன் கூட உடனடி சம்பந்தம் கொண்டிருப்பது செப்டம்பர் 20 அன்று தொடங்கும் 10 நாள் சீட்டு விழா. அன்றே ஸ்ரீராம் சீட்டில் ஒரு சந்தாதாரராகச் சேரப்போகிறேன்.

# சந்திப்பின் விளைவு அது.




"திட்டமிட்டு சீட்டில் சேர்ந்து என் குழந்தைகளின் நலனுக்காக என்னால் இயன்றவரை குடும்பத்தின் பொருளாதாரத்தை உயர்த்த முனைவேன்."

நீங்களும் என்னைப் போன்ற அதிர்ஷ்டசாலியாக இருக்கப் போகிறீர்கள் என்பது என் நம்பிக்கை. பரிசு பெறுவதில் மட்டுமல்ல. சீட்டு நிதியின் தனிச் சிறப்பு நிறைந்த பரிமாணங்களைத் தெரிந்து கொள்வதிலும் கூட. இதுவரை யாரும் உங்களை வந்து சந்திக்காமலே இருந்தாலும் கூட, தயங்குவதற்கு என்ன இருக்கிறது? ஸ்ரீராம் சீட்டை விரைந்து நாடுங்கள்.

***ஸ்ரீராம் நண்பருக்கு நல்வரவு !***

23

ஆரோக்கிய ரகசியம்:

வி. என். குமாரசாமி.

# அகத்தின் அழகு முகத்தில் தெரியும்!



பிராணாயாமம் அல்லது நாடி சுத்தி செய்யும் விதம்.

கை, கால், முகம், மூக்கு முதலிய வைகளைச் சுத்தமாகக் கழுவித் துடைத்துக் கொள்ளவும். மூக்கில் சளி இருந்தால் சிந்தித் துடைத்துக் கொள்ளவும். சுத்தமான காற்றோட்டமான இடத்தில் சுத்தமான விரிப்பின் மீது அமரவும். ஒரு கைக்குட்டை அருகில் இருப்பது நல்லது. சில சமயம் மூக்கைத் துடைத்துக் கொள்ள நேரலாம்.

பத்மாசனத்தில் அமரவும். பத்மாசனம் சரியாகப் போட வராதவர்கள் சாதாரணமாகவே உட்காரலாம். ஆனால் பத்மாசனத்தில் அமர்வதுதான் சிலாக்கியம் என்பதை மனத்தில் இருத்தி, பத்மாசனம் போடத் தினமும் முயற்சி எடுக்க வேண்டும். (பத்மாசனம் பற்றி இந்தத் தொடரின் தொடக்கத்திலேயே எழுதியிருக்கிறேன்.) முதுகு, சிரசு, கழுத்து இவை மூன்றும் நன்றாக நிமிர்ந்து நேராக இருக்க வேண்டும். கூனல் வளைவு கூடாது. பத்மாசன நிலையில், இயல்பாகவே இவை நிமிர்ந்துவிடும். இடது கையை இடது தொடையின் மேல் தளர்த்தியாக வைக்கவும். உள்ளங்கை மேல்புறம் இருக்க வேண்டும். சாதாரணமாக மூச்சை விட்டு வெளியேற்றவும். இப்போது வலது கை பெரு விரலால் வலது நாசியை அழுத்தி மூடவும். இலேசாக அழுத்தினால் போதும். இடது நாசியால் மூச்சை இயன்றவரை இழுத்து நுரையீரல்களை நிரப்பவும். பிறகு வலது கை மோதிர விரலால் இடது நாசியை அழுத்தி மூடவும். இப்போது நாசி மீது உள்ள கட்டை விரலை அகற்றி மூச்சை மெதுவாக விடவும். மறுபடி அதே வலது நாசி வழியே மூச்சை மெதுவாய் இழுத்து நுரையீரல் நிறையும் வரை நிரப்பிக் கட்டை விரலால் மூடிக் கொண்டு, இடது நாசி மீது உள்ள மோதிர விரலை அகற்றி மூச்சை மெதுவாக வெளியே விடவும். இப்படிச் செய்தால் ஒரு முறை நாடி சுத்தி செய்ததாகும். தொடர்ந்து செய்ய, எந்த நாசி வழியே மூச்சை வெளியேற்றினோமோ அந்த நாசி வழியாகவே மூச்சை இழுக்க வேண்டும். மற்றொரு நாசி வழியாக வெளியேற்ற வேண்டும்.

படிக்கும் போது ஏதோ குழப்பமாகத் தோன்றும். படித்துப் பார்த்தபடியே இரண்டு தரம் செய்து பழகினால் குழப்பம் விலகிச் செயல் முறைபுரிந்துபோகும். செயல் முறைதான் புரிந்து போகுமே தவிர, சரியாகச் செய்து விட்டதாகாது. முக்கியமாக, மூச்சை உள்ளே இழுத்ததைவிட இரண்டத்தனை மெதுவாகமூச்சை வெளியே விடப் பழக வேண்டும்! இது சுலபமல்ல. பழகப் பழகத்தான் படியும்.

மூச்சை இழுப்பது, விடுவது எல்லாம் ஒரு கணக்காக இருக்க வேண்டும். ஏதோ இழுத்தோம் விட்டோம் என்று இருக்கக் கூடாது. அப்படிச் செய்தால் பலன் பூஜ்யம் தான். மூச்சை இழுக்கும் போது ஏழு எண்ணும் வரை இழுக்க வேண்டும். விடும் போது பதினாலு எண்ணும் வரை விட வேண்டும். ஏழு எண்ணுவதைச் சிலர் பரபரவென்று எண்ணி விடலாம் அல்லவா? அதைத் தவிர்க்க, வெறும் எண்ணிக்கையை விட இதற்கான மந்திரத்தைப் பிரயோகிப்பது நல்லது. அந்த மந்திரம் இது தான்: "ஓம் பூ: ஓம் புவ: ஓம் ஸ்வ: ஓம் மஹ: ஓம் ஜன: ஓம் தப: ஓம் சத்யம்." ஒவ்வொரு தடவையும் மூச்சு இழுக்கும் போது இதை ஒரு தடவையும் விடும் போது இரண்டு தடவையும் கூறி வரலாம்.

இப்படிமூச்சை இழுத்துவிட்டுக்கொண்டு மந்திரமும் ஜபித்துக் கொண்டிருக்கும் போதே மனம் எங்கேயாவது போய்விடும்!



# "பேசாதே!"

இளைஞர்களுக்கு பாபா:

"அதிகம் பேசாதீர்கள். அதிகம் பேசும் போது நேரம் வீணாவது மட்டுமல்ல. உங்கள் சக்தியும் விரயமாகிறது. அதே சமயம் உங்கள் மீது பிறர் வைத்துள்ள மதிப்பும்குறைகிறது.'போர்' என்பார்கள். ரொம்ப அவசியமான போது மட்டுமே பேசுகிறவனுடைய ஞாபகசக்தி அதிகரிக்கிறது. ஆன்மசக்தியை உணரவும் மௌனம் உதவுகிறது."

(பாபாவின் பொதுப் பணிக்குப் பொன் விழா ஆண்டு.)

---

அதைக் கட்டிப்பிடித்து இழுத்து வந்து பிராணாயாமத்தில் நிலைக்கச் செய்ய வேண்டும். மூச்சை உள்ளே இழுக்கும் போது, ஆரோக்கியம், ஆனந்தம், சுகம், சாந்தம் எல்லாம் நம்முள் நிரம்பி உடல் முழுவதும் பரவுவதாக எண்ணலாம். மூச்சு விடும் போது நோய், கஷ்டம், துன்பம் முதலியன வெளியேறுவதாகக் கருதலாம்.

மூச்சை இழுப்பதற்குப் 'பூரகம்' என்றும் விடுவதற்கு 'ரேசகம்' என்றும் பெயர். மூச்சை உள்ளே அடக்குவதற்குக் 'கும்பகம்' என்று பெயர். இந்தக் கும்பகத்தை உடனே செய்ய வேண்டாம். மூச்சை இழுக்கவும்விடவும்நன்றாகப்பழகித்தேர்ச்சி பெற்ற பிறகு கும்பகம் செய்யலாம்.

ஆரம்ப சாதகர்கள் ஐந்து முறை நாடி சுத்தி செய்யலாம். படிப்படியாக அதிகரித்து, பத்து அல்லது பதினைந்து தடவை வரை செய்யலாம். இதனை ஆசனங்கள் செய்து முடித்த பிறகு செய்து, கடைசியாகச் சாந்தி ஆசனத்தில் இருக்க வேண்டும்.

நாடி சுத்தி செய்த பிறகு அப்படியே எழுந்து விடக் கூடாது. கட்டாயம் தியானத்தில் சற்று நேரம் இருக்க வேண்டும். தியானத்தின் போது பத்மாசனத்தில் அமர்ந்து, கைகள் இரண்டையும் உள்ளங்கை மேல் புறம் பார்க்கத் தொடை மீது தளர்த்தி வைத்துக் கண்களை மூடிக் கொள்ள வேண்டும். வெறுமனே உட்கார்ந்திருந்தால் போதாது. மனத்தைத் தியானத்தில் ஈடுபடுத்த வேண்டும்.

மனத்தைப்புருவமத்தியில்வைத்து அவ்விடத்தில் 'ஓம்' என்ற பிரணவம் பிரகாசமாக ஒளிர்வதாகப் பாவனை செய்து, அதையே பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். அல்லது தாமரை மலர்ந்து ஜகஜ்ஜோதியாக ஜொலிப்பதாக நினைக்கலாம். தீப ஜோதியை எண்ணலாம். இப்படி புருவ மத்தியில் மேற்சொன்ன மூன்றில் ஏதேனும் ஒன்றை நிலைநிறுத்தி, 'ஓம், ஓம், ஓம்' என்று நிதானமாகத் தியானிப்பதால் மனம் அடங்கும்; ஒடுங்கும். ஆன்மபலம் வளரும்.

கும்பகம் என்பது மூச்சை அடக்குவது என்று சொன்னேன். பூரகத்துக்குப் பிறகு மூச்சை அடக்கி 'ஓம், ஓம், ஓம்' என்று தியானித்துப் பிறகு ரேசகம். ரேசகம் முடிந்ததும் மறுபடி மூச்சை அடக்கி 'ஓம், ஓம், ஓம்' என்ற தியானம். மீண்டும் பூரகம். இவ்வாறு தொடர்ந்து செய்ய வேண்டும். இதை ஆரம்ப சாதகர்கள் செய்ய வேண்டியதில்லை. பல மாதங்கள் பிராணாயாமம் செய்து பழகி, தேர்ச்சி பெற்ற பிறகு செய்ய ஆரம்பிக்கலாம். முதலில் மூன்று முறை 'ஓம், ஓம், ஓம்' என்று கூறி முடியும் வரை மூச்சை அடக்குகிறவர், பிறகு படிப்படியாக நேரத்தை அதிகரித்து, ஆறு முறை 'ஓம்' சொல்லி முடிக்கும் வரை மூச்சை அடக்கலாம்.

பிராணாயாமம் எப்படி உடல் உறுப்புக்கள் அனைத்துக்குமே நன்மை பயக்கிறது என்பதை அறிவியல் பூர்வமாகச் சென்ற இதழில் விளக்கினேன். க்ஷயம், ஆஸ்துமா, ஜலதோஷம், வறட்டு இருமல் முதலியன பிராணாயாமம் செய்பவர் கிட்டத்தில் வராது. அவர்களுடைய சுவாசக் குழல், நுரையீரல் ஆகியன எப்போதும் சுத்தமாயும் ஆரோக்கியமாயும் இருக்கும். ஆயுள் அதிகரிக்கும்.

சிலர் வெறுமனே உட்கார்ந்திருக்கும் போதே கால்களை வெட வெட என்று ஆட்டிக் கொண்டிருப்பதைக் காணலாம். "காலாட்டாதே" என்று பெரியவர்கள் கோபிப்பர். பிராணாயாமம், தியானம் முதலியன, இம்மாதிரி பழக்கங்களை வெற்றி கொள்ள உதவும். உடல் மட்டுமின்றி மனமும் ஆரோக்கியமாக விளங்கும். அகத்தின் அழகு முகத்தில் தெரியும்!

(தொடரும்)

# நஷ்டஈடு

"யம்மா" சுந்தர் கண்மூடி இரண்டு கைகளாலும் கன்னங்களைப் பொத்திக் கொண்டான். நான் மெல்ல நகர்ந்து அவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு அந்த நியூஸ் பேப்பரை என் பக்கம் திருப்பினேன்.

"கடவுளே! என்னைக்குத்தான் இங்கே விடியப் போகுதோ! இப்படி மனுஷனை மனுஷன் தாக்குகின்ற கொடூரம் ஒழியாதா சம்பத்? திமர் திமர்னு ஜாதிக் கலவரங்கள். இது யார் மூட்டின தீ? நிஜமாவே மனுஷங்க கிட்ட இன்னும் அந்த மிருகக் குணம் போகலைடா..."

நிறையச் சிந்திக்கின்ற சுந்தருக்கு இதைத் தாங்க முடியாதுதான். இந்த ஒரு மாத கால கோர யுத்தத்தில் எத்தனை உயிர்கள், மாட்டுத் தொழுவம், குளம், கிணறு நடுச் சந்து என்று பாராமல் பிரிந்து போயிருக்கின்றன! குரூரமான கொலைகள், தாக்குதல்கள் கொடூரமான சாவுகள் காயங்கள்!

நான் பேசாது குனிந்து செய்திகளை வாசித்தேன்.

"பாத்தியா சம்பத், எத்தனை சேதம்!"

"கஷ்டம்டா, பேப்பர்லெ கட்டம் கட்டிப் போட்டிருக்கான் பாரேன். உயிர் போனது எத்தனை, காயமானது எத்தனைன்னு... நாம போய்க் கலவரப் பகுதியை நேரடியாப் பார்த்து நம்ப பத்திரிகையிலே ஏன் ஒரு கட்டுரையா எழுதக் கூடாது? ப்ளீஸ் எடிட்டர்கிட்டே கேளேன்."

"டெய்லி பேப்பர்ஸ்லேதான் பக்கம் பக்கமா எழுதித் தள்ளிட்டாங்களே! கலவரமெல்லாம் அடங்கின பிற்பாடு வீக்லிலெ நாமும் எழுதணுமா?"

"தப்பு சம்பத்! டெய்லீஸ்ல வந்தது வெறும் செய்தி மட்டும்தான். பாதிக்கப்பட்டவங்களைச் சந்திக்கணும். இந்த வேதனை அவங்க மனசுல எந்த அளவுக்கு இறங்கியிருக்குன்னு ஆழம் பார்த்துச் சொல்லணும். இன்னும் பதற்றமாவும், படபடப்பாகவும் ஏதோ ஒரு பீதியோடதான் இருப்பாங்க. அவங்க மனசைப் படிச்சு அப்படியே எழுதினா மற்ற மக்களையும் யோசிக்க வைக்கலாம்."

"ஓ.கே. எடிட்டர்கிட்ட கேட்போம்."

எடிட்டரிடம் தெளிவாக எடுத்துச் சொன்னவுடன் சம்மதித்து விட்டார். மௌண்ட் ரோட்டிற்குப் போய் பிளாக் அன்ட் ஒயிட் கலர் என்று பிலிம் ரோல்களை வாங்கி நிரப்பிக் கொண்டோம்.

அந்த ஊரின் விளிம்பைத் தொட்ட போது பலபலவென்று விடிந்திருந்தது. கருவேல மரங்களின் அடர்த்திக்கு உள்ளே ஊர் நீண்டு கிடந்தது. பதினைந்து நிமிட நடைக்குப் பின் ஊரின் அடையாளம் நேற்றுப் போட்ட கோலம் மாதிரி அழிந்து போய்த் தெரிந்தது. ஒன்றிரண்டு நாய்களும் எருமை மாடுகளும்தான் சுதந்திரமாக உலாவிக் கொண்டிருந்தன. நாங்கள் வளைந்து மெல்ல ஒரு தெருவிற்குள்ளே நுழைந்தோம்.

"ஏய் மிஸ்டர் யாரது?"

போலீஸ் விசில் ஊதி எங்களை மடக்கிற்று. தெருவை ஒட்டியிருந்த பள்ளிக்கூடம் பிதுங்க, போலீஸ் அடைகாத்துக் கொண்டிருந்தார்கள். "நாங்க மெட்ராஸ்ல இருந்து வர்றோம். ரிப்போர்டர்ஸ்.. நியூஸ் எடுக்கணும்..." என்றேன். சிறிது யோசித்தார்கள்.

"சித்த முன்னாடி வந்திருக்கப்படாது? இப்பத்தான் மினிஸ்டர் வந்துட்டுப் போனாரே.. சி.எம். கூட வந்தாலும் வரலாம். பக்கத்துல ஒன்றியச் செயலாளர் வீட்டுல மாரேஜ்."

"அப்படியா?"

"ஜாஸ்தி போட்டோஸ் எடுக்கக் கூடாது. சிலதைத்தான் எடுக்கணும். நீங்க பாட்டுக்குத் தட்டித் தீத்துடாதீங்கப்பா. அப்புறம் எஸ். பி. எங்க முட்டியைத் தட்டிடுவார்..."

நாங்கள் முன்னேறி நடந்தோம். மெல்லத் திரும்பிப் பார்க்க, பத்தடி தூரத்தில் எங்களைத் தொடர்ந்து ஒரு போலீஸ்காரர் வருவது தெரிந்தது. ஆனால் எதையும் கண்டு கொள்ளாமல், சுந்தரின் காமிரா தகர்க்கப்பட்ட ஊர்ச் சாவடி, தீக்கிரையான குடிசைப் பகுதிகள், முறிக்கப்பட்ட மின்சாரக் கம்பங்கள்.. கை கால்கள் போய் மாமிச மலை மாதிரிக் குவிந்து கிடக்கும் கால்நடைக் கூட்டங்கள் என்று ஒவ்வொன்றையும் படம் பிடித்துக் கொண்டேதான் வந்தது.

"என்ன சம்பத் இங்கே நுழையறே? தெருவெல்லாம் ஒரே கும்பலா இருக்கு...!"

கருத்து: பானுகுமார்

கதை வடிவம்: பாரதிபாலன்

''இருக்காதா பின்னே? மந்திரி வந்துட்டுப் போயிருக்கார். போதாதுன்னு எல்லாக் கட்சிக்காரர்களும் போட்டி போட்டு வந்து ஆறுதல் சொல்லிட்டு ஏதோ முடிஞ்சதைக் கொடுத்துட்டு விளம்பரம் தேடிக்கிறாங்க! சமூகத் தொண்டர்கள்னு ஒரு கோஷ்டி.. ஏரியா டெவலப்மெண்ட் டிபார்ட்டுமெண்டு ஆளுங்க வேற கேம்ப் போட்டிருக்காங்க போல...''

''ப்ச! எத்தனை பணம் கொடுத்தாலும் அவங்களுக்குப் பழைய சந்தோஷம் வந்திடுமா சம்பத்?''

பேசிக் கொண்டே நடந்தோம். திடுமெனப் புழுதி கிளம்ப எங்களை உரசிக் கொண்டு ஒரு ஜீப் வந்து நின்றது. அரசாங்க வண்டி போல் தெரிந்தது.

''சார் உங்க இரண்டு பேரையும் ஒன்றியம் டி.பி.க்குக் கூப்பிட்டுட்டு வரச் சொன்னார். ஏறுங்க போகலாம்...''

''எதுக்கு? டி.பி.க்கா!''

''ஏதோ பேசணுமாம். பக்கம்தான் சார். ஜீப்ல ஏறினீங்கன்னா ஐந்து நிமிஷத்துல போயிடலாம்.''

ஏறினோம். ஒரு மைல் தூரப் பயணம். ஊருக்கு வெளியே அந்த டிராவலர்ஸ் பங்களா ஒரு தோட்டத்துக்குள் கிடந்தது. எல்லா அறைகளிலும் ஆளும் கட்சிக் கும்பலே அடைந்து கிடந்தது.

''வணக்கம் தம்பி! மெட்ராஸ்ல இருந்து வந்திருப்பதாக் கேள்விப்பட்டோம். என்னா எழுதப் போறீங்க? உங்ககிட்ட தெளிவாச் சொல்லிடுறேன். கலவரத்துக்குக் காரணமே எதிர்க்கட்சி ஆளுங்கதான். இதை யார்ட்டக் கேட்டாலும் சொல்லுவாங்க. ஆச்சா, இத்தனை கலவரம் நடந்துருக்கே ஆளும் கட்சி என்னா பண்ணுச்சுன்னு கேட்பானுவ, இறந்தவங்களுக்கு 25,000 ரூபாயும் காயம் பட்டவங்களுக்குத் தலைக்கு ரூபாய் 5000 மும் தருவதாகத் தலைவர் அறிவிச்சிருக்கார். அமைச்சர் வந்தப்ப உறுதியாத் தகவல் சொன்னார். வேற எதுனாக் கேக்குறீங்களா?''

''தேவைப்பட்டா வந்து கேட்கிறோம்.''

''அண்ணனோட போட்டோ வேணுமா?'' பக்கத்தில் இருந்த ஜால்ரா ஜிங்கென்று தட்டினான். வேண்டாம் என்று கிளம்பி விட்டோம்.

**ஊ**ருக்குள் நுழைந்ததும் வயதான பாட்டி ஒருத்திதான் எங்கள் கண்களில் பட்டாள். எதுவுமே எனக்குத் தெரியாது என்ற பாவனையில் காலை நீட்டி முதுகைப் பந்தல் காலில் சாய்த்துக் கொண்டு அந்தக் குடிசை வாசலில் வெற்றிலையைக் குதப்பிக் கொண்டிருந்தாள். மெல்லப் பேச்சுக் கொடுத்தேன்.



''கலி முத்திப் போச்சு ராசா. இப்படிக் கண்மண் தெரியாது அடிச்சுக்கிறாங்களே? யார் என்னத்தத் தூக்கிட்டுப் போவப் போறாகளோ. என் பேரனைக் கொன்னுட்டாங்க பாவி மக்கா! பிள்ளைங்கள் எல்லாம் தெருவிலே நிக்குதே. ராசா நீங்க சர்க்கார் ஆளுங்களா...''

அதற்குள் யாரோ என் முதுகைச் சுரண்ட மெல்லத் திரும்பினேன். தொடைக்கு மேல் லுங்கியைத் தூக்கிக் கட்டிக் கொண்டு ஒருவன் நின்று கொண்டிருந்தான். அவசரமாய்ப் பக்கத்து வீட்டிற்குக் கூப்பிட்டுப் போனான். என்னைப் பார்த்ததும் ஒரு நடுத்தர வயது அம்மாள் குபீரென்று பொங்கி அழுது விட்டாள். அந்த அம்மாள் அழுது கொண்டே பேசியது எனக்குப் புரியவே இல்லை. என்னைக் கூப்பிட்டு வந்தவன்தான் பேசினான்.

''சார் இந்தம்மா புருஷனை வெட்டிக் குளத்துல தூக்கிப் போட்டுட்டாங்க! பாவம் மகளுக்குக் கல்யாணம் கூட வெக்கிறதாப் பேசியிருந்தாங்க. இன்னும் ரெண்டு பொட்டைங்க இருக்கு. பாவம் இந்தம்மா... ஏதாவது சர்க்கார்ல கூடுதலாக் கிடைக்கிற மாதிரி எழுதுங்க...''

எனக்கு அப்படியே ஆடிப் போயிற்று! சுந்தர் விழி அகட்டி என்னைப் பார்த்தான். நான் பேசாது எழுந்து இடதுபுறம் திரும்பி ஒரு சந்துக்குள் நுழைந்து நடந்தேன். சுந்தரும் காமிராப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு வந்தான். அந்தப் பகுதியில் திரும்பிய பக்கமெல்லாம் அழுகையும் புலம்பலுமாகத் தான் இருந்தது. குழந்தையும் கையுமாக இருந்தாள் ஓர் இளம் பெண். அவளிடம் போய் ''நாங்கள் பத்திரிகைக்காரங்க...'' என்றதுதான் தாமதம். நெஞ்சின் குமுறலை எல்லாம் கொட்டித் தீர்த்தாள்...

''வாங்க! இப்ப வந்து எழுதுங்க. கண்ணீர்க் கதைன்னு போடுங்க; மந்திரியும் எம்.எல்.ஏ.வும் ஐயாயிரம் ஆறாயிரம்னு துட்டு தரேம்பாங்க; இந்தப் புள்ளைக்கு அப்பனை யாராலய்யா குடுக்க முடியும்...! வெட்டிப் போட்டாங்களே! போன உசுரு வருமா...'' குழந்தையைக் கட்டிக் கொண்டு 'ஹோ' வென்று கதறினாள்.

அவள் துக்கத்தின் பரிமாணம் எங்களை உலுக்கியெடுத்தது. ஒப்பற்ற மனித உயிருக்கு நிர்ணயித்து விலை பேசும் மடத்தனம் உறுத்தியது. அழுது கொண்டிருந்தவளைச் சமாதானப்படுத்த வழி அறியாது அடுத்த குடிசை நோக்கி நடந்தோம். திண்ணையில் முதியவர் ஒருவர் மிகவும் பரிதாபமாக உட்கார்ந்திருந்தார். கூரை ஒரு பக்கமாக எரிந்து போயிருந்தது. வாசலில் மண்பாண்டச் சில்லுகளின் சிதறல். சப்பையாக நசுங்கிய அலுமினியப் பாத்திரம் வன்முறைக்கு சாட்சி சொன்னது.

''தாத்தா நாங்க பத்திரிகைக்காரங்க...'' என்று எதிர்பார்ப்புடன் அவரை நெருங்கினோம்.

''நான் என்னத்தத் தம்பி சொல்லட்டும். இத்தனை பேருக்கு அடிச்ச யோகம் எனக்கு வரல்லியே! சாக வேண்டாம். ஏதோ அடி கிடி பட்டிருந்தாலாவது கொஞ்சம் பணம் கிடைச்சிருக்கும். ஐயாயிரம்! லேசுப்பட்ட காரியமா? ப்சு அவ்வளவுதான் நமக்குக் கொடுத்து வெச்சது...'' என்றார் அந்தக் கிழவர்.

# பாதை மாறிய பயணம்

வே. கண்ணன்

போதை அரக்கிக்கு
இதயத் துடிப்பை
இரையாகப் போடும்
இளைஞனே!

அந்தோ!
இருபதிலே
அறுபதின் தளர்ச்சியா?

இடுகாட்டின் நடுவில் நின்று
இன்பராகம் தேடும்
அன்புச் சகோதரனே!
நீ
இருட்டு இராஜ்யத்தின்
இளவரசனாவதற்கு
அறிவுக் கண்களையல்லவா
அடகு வைத்திருக்கிறாய்?

பாதை மாறிய பயணத்தில்
உனது காலடியில்
மாறி மாறி இடறுவது
மானுடமும், பண்பாடும்
அல்லவா?

ஊசி முனைகள் உன்
உடலில் எழுதுவது
மகிழ்ச்சிக் கோலமல்ல
சகோதரனே!
மரண சாசனம்!

தீப்பொறியைத்
தீண்டியா பார்க்கவேண்டும்!

சாக்கடையில் சந்தன மணமா?
யார் உனக்குச் சொன்னது?

போதும்! போதும்!
போதைப் புழுதியிலே
புரண்டது போதும்!
பாதைமாறிப்
பட்ட துயர் போதும்!

மனிதப்பிறவியைப்
புனிதப்படுத்த வா!
மரணத்திலை விட்டு
மானுட பூமிக்குவா!

# மாட்டின் கண்ணில் மகாவிஷ்ணு!

## பெற்றோருக்கு எச்சரிக்கை!

கூட்டுக் குடும்ப முறை மெதுவாக அழிந்து வரும் இந்நாளில், முன் ஜாக்கிரதையாகப் பெற்றோர்கள் தங்களுடைய மனோபாவத்தை மாற்றிக் கொள்ள வேண்டும். இதனை இக் கதையின் மூலம் சுஜாதா உணர்த்தியுள்ளார். இன்றைய யுகத்தில் அன்பு, பாசம், கருணை போன்ற மென்மையான உணர்வுகள் 'பணம்' என்ற ஒரு பூதத்தின் முன்னால் செயலற்று நிற்கின்றன. தாயேயாயினும் தனம் இருந்தால்தான் தன்மானத்துடன் வாழ முடியும். இதனை மறக்காமல், பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்குக் கடமைகளைச் செய்வதுடன் தங்கள் எதிர்காலப் பாதுகாப்புக்கென்றும் சிறிதளவாவது சேமித்து வைத்துக் கொள்ள வேண்டும்.

— பெங்களூர், த நம்பல் பாலமணி.

## சொத்துதான் அம்மா ஆகிறது!

இது போல் பல ஆயிரம் அம்மாக்கள் நம்மிடையே அன்புக்கும், ஆதரவுக்கும் தவித்துக் கொண்டிருப்பதுதான் நடைமுறை! அதில் எத்தனை பேருக்கு எதிர்பாராத வகையில் சொத்து வருகிறது? அப்படிச் சொத்து வந்த பிறகு அந்தச் சொத்துதான் அம்மாவாகிறது. நிஜமான தாய் மீண்டும் ஒரு கால்பந்துதான் என்பது வேதனை. எப்போதும் போல கடைசி வாக்கியங்களில் 'சுஜாதா' தெரிகிறார்!

— சென்னை, எஸ். ஜீஜாபாய்.

## பரஸ்பரம் புரிந்துகொண்டால்...?

பெற்றோர் வயதானவுடன் குழந்தைகளுக்கு பாரமாய் ஆகி விட்டதாக உணர்வது மிகவும் கொடுமை. அதே சமயம் பணத்திற்காகப் பெற்றோரிடம் அன்பு கொண்டது போல் நடிப்பது மிகக் கேவலம். இதற்குக் காரணம் இருவருக்குமிடையில் சரியான புரிந்து கொள்ளல் இல்லாமையே. தன் வீட்டிற்கு வரும் மருமகளிடம் வரதட்சிணை என்ற பெயரில் பணம் பிடுங்கிக் கொடுமைப்படுத்தும் மாமியார், தன் வயதான காலத்தில் தன் மகனும் மருமகளும் தன்னைக் காப்பாற்ற வேண்டும் என்று எதிர்பார்த்தால் அது எப்படி நிறைவேறும்? தன் தாய் வரதட்சணை கேட்கும் போதும், தாயைத் தன் மனைவி புறக்கணிக்கும் போதும் அன்பின் தன்மையை விளக்கி அவர்களுக்குள் பரஸ்பரம் நெருக்கத்தை ஓர் ஆண் ஏற்படுத்த வேண்டும்.

நாட்டார்மங்கலம், எஸ். சிவானந்தவல்லி

## சுஜாதா மார்க் முத்திரைகள்!

''தாய் — II'' ''மத்யமரின்'' அப்பட்டமான ஜெராக்ஸ். ''அம்மா வேறே எங்கே போவா சித்ரா'' எனும் போது தாய்ப் பாசம், ''அந்த ராணி — மேனா மினுக்கி'' என்ற வார்த்தையில் தென்படும் வயிற்றெரிச்சல் ''பாழாய்ப் போன நியாயத்''தில் எண்ணப்படும் வருத்தம். ''இது சுதாகருக்குத் தெரியுமா மாமா?'' எனும் போது ''அவனுக்குத் தெரியவேண்டாமே? தெரிந்திருக்கக் கூடாதே'' என்ற ஆவல் இவையனைத்தும் ''சுஜாதா'' மார்க் வார்த்தைகள், எண்ணங்கள்.

தேவத்தான்பட்டி, செ. பொன்னழகு.

## பெற்ற தாயைப் பந்தாடுவதா?

சகோதரர்கள் இருவருமே பெற்ற தாயைப் பந்தாடுகிறார்கள்; பாச வதை புரிகிறார்கள். இருவருக்குமே தன் சொத்து சேராமல் அனாதைகளுக்கு எழுதி வைத்து விட்டு, அலைக்கழிக்கப்பட்ட அந்த அபலை அன்னை, அவர்கள் இருவரையும் விட்டு வெளியேறியிருந்தால், என் மனம் பெருநிம்மதி அடைந்திருக்கும்! சுதாகரிடமிருந்து வந்த தந்தி இவ்வாறு இருந்திருக்க வேண்டும்!

"MOTHER JOINED ASHRAM."

சென்னை — 93, க. பழனியாண்டி.

## மாட்டின் கண்ணில் மகாவிஷ்ணு!

இந்தக் கதையைப் படித்ததும் சில ஆண்டுகளுக்கு முன்பு பார்த்த ஒரு திரைப் படக் காட்சி நினைவுக்கு வருகின்றது. உழைக்கச் சக்தியற்ற மாடு ஒன்றைச் சந்தையில் விற்றபின், அந்த மாட்டின் கண்ணில் ''மகா விஷ்ணு'' தோன்றுவதாகவும் அதைக் காட்டி மாட்டை வாங்கியவன் ஏராளமான பணம் சம்பாதித்து விட்டதாகவும் அறிந்து, விற்ற மாட்டை அதிகப் பணம் கொடுத்து

**மத்யமர்: தாய் — 2**
**வாசகர் விமர்சனம்.**



**ரூ. 50 பரிசு பெறுபவர்:**

**க. பழனியாண்டி,**
**மே/பா. இரா. மாணிக்கம்,**
**1/2, ஏகாம்பரம் தெரு,**
**சாலிகிராமம், சென்னை — 93.**

**மற்ற கடிதங்கள் ஒவ்வொன்றும் ரூ. 25 பரிசு பெறுகின்றன.**

மீண்டும் வாங்குவதற்கு ஒருவன் முயற்சி செய்யும் நகைச்சுவையான காட்சி அது. மாட்டின் மேல் கொண்ட பரிவோ பாசமோ அவனை மீண்டும் அந்த மாட்டை வாங்கத் தூண்டவில்லை. எல்லாம் பணம் செய்யும் வேலைதான்!

தஞ்சாவூர் — 7, வளர்மதி ஆசைத்தம்பி.

## பாராட்ட ஒரு சொல்...?

கதைக் கரு பழசுதான். பலரால் கையாளப்பட்டதுதான். சுஜாதாவின் தனித்தன்மை மிக்க நடையும் விறுவிறுப்பும் நமக்குப் பழகிப் போன அம்சங்களே. ஆனால், அந்த இரண்டு தந்திகள், அவற்றைக் கொண்டு கதையை முடித்திருக்கும் உத்தி புதிது. நிறைந்த பாராட்டை வெளிப்படுத்த ஒரு சொல் தந்து உதவுவீர்களா?

திருவனந்தபுரம், ஆர். லலிதா குமாரி.

## தலைநிமிராத பலவீனர்கள்!

திடீரென்று வந்த சொத்துக்காகத்தான் இரு பிள்ளைகளுக்கும் தாயின் மீது திடீர்ப் பாசம் ஏற்பட்டது போல் மேலோட்டமாகக் காட்டப்பட்டாலும் உண்மையில் இருவருக்கும் தங்கள் தாயின் மீது ஆழ்ந்த அன்பு இருக்கிறது என்பது அவர்களின் எண்ண வெளிப்பாட்டில் தெளிவாகப் புரிகிறது. இன்றைய சமுதாய இளைய தலைமுறைப் பிள்ளைகள் பெற்ற தாய்க்காகக் கூடத் தலை நிமிர முடியாத இழிந்த பலவீனர்களாக இருப்பதை இடித்துக் காட்டுவதே ஆசிரியரின் நோக்கம் எனக் கருதுகிறேன்.

கி. தாம்பரம், மூனு. நம்மாழ்வார்.

## மினி சினி செய்திகள்:

●● இப்படியே கதாநாயகின்னு 'பொம்மை' மாதிரி வந்து போயிட்டிருந்தா என்ன பிரயோஜனம்? எல்லோர் மனசுலயும் நிக்கிறமாதிரி 'பளிச்'சுனு ஒரு காரெக்டர் பண்ணணும். அதுல தன்னோட முழுத் திறமையும் காட்டணும் — இப்படித் தீராத ஆசை கௌதமிக்கு. அப்படி ஒரு ரிஸ்க், எந்தத் தயாரிப்பாளரும் எடுத்துக்க மாட்டாங்கன்னு, தானே சொந்தப் படம் தயாரிக்கலாம்னு தேதிகளை மொத்தமா ஒதுக்கி வச்சிருந்தாங்களாம். அந்த நேரம்தான் புது டைரக்டர் மணிவாசகம் 'எங்க ஊரு பூவாத்தா'ன்னு ஒரு கதை சொன்னாராம். கௌதமிக்குப் பிடித்துப் போக, தன்னோட படம் தயாரிக்கும் திட்டத்தைத் தூக்கிப் போட்டுட்டு, மொத்தமா ஒரே ஷெட்டியூலா கால்ஷீட்டை 'எங்க ஊரு பூவாத்தா'வுக்கே கொடுத்துட்டாராம்!

●● சென்னைத் திரைப்படக் கல்லூரியில் படிச்சு, 'கோல்டு மெடல்'லோட பாஸ் பண்ணினாரு ஜி. கே. ராஜா. சினிமாவிலே ஏதாவது புதுசாச் செய்யணும்னு நுழைஞ்சார். ஆரம்பத்தில் அவர் நினைக்கிற விதமா ஒரு படமும் அமையலை. இப்ப மனுஷன் புகுந்து விளையாடுகிறார். ஒளிப்பதிவில் இவரோட புதுப ஃபார்முலா ஓவர் லைட்டே இல்லாமல் இயற்கையாக உள்ள லைட்டை மட்டுமே பயன்படுத்திப் படம் பிடிப்பது. 'ஒரு புதிய கதை.' நடிகை பல்லவியின் சொந்தப் படமான 'உருவங்கள்' இதிலெல்லாம் இயற்கையான லைட்டிலே இவர் சிறப்பாக ஒளிப்பதிவு செய்திருப்பதைப் பார்த்துட்டுத்தான் இப்போ படங்கள் புதுசா புக் ஆவுதாம். இப்போ டைரக்டர் மகேந்திரனின் 'ஊர் பஞ்சாயத்து' படத்துக்கு ஒளிப்பதிவு செய்துட்டிருக்கார்!

— எஸ். பாலு

• பூவாத்தா கௌதமி



# இது கனவுகள் நிறைவேறும் சீசன்!



• ராஜா: காத்திருந்தது வீண் போகலே...

# ஒய்வு பெற்ற பின்பும் நிரந்தர ஊதியம் பெற...

## மாதாந்திர வருமானத் திட்டம்





| முதலீடு<br>ரூ. | மாத வட்டி<br>ரூ. | 6ம் ஆண்டு இறுதியில் போனஸ்<br>ரூ. | மாதாந்திர வட்டி தவிர 6 ஆண்டிற்குப் பிறகு கிடைக்கும் தொகை<br>ரூ. | வட்டிக்கு ஆண்டுக்கு கிடைக்கும் வருமான வரிவிலக்கு<br>ரூ. |
|---|---|---|---|---|
| 5,000 | 50 | 500 | 5,500 | 600 |
| 10,000 | 100 | 1,000 | 11,000 | 1,200 |
| 15,000 | 150 | 1,500 | 16,500 | 1,800 |
| 20,000 | 200 | 2,000 | 22,000 | 2,400 |
| 25,000 | 250 | 2,500 | 27,500 | 3,000 |
| 50,000 | 500 | 5,000 | 55,000 | 6,000 |

**சிறப்பு அம்சங்கள்:**

* 12% வட்டி மாதந்தோறும் வழங்கப்படும்
* வட்டிக்கு வருமான வரிவிலக்கு (80.எல் பிரிவின்படி)
* ஒருவர் தனியாக ரூ. 2 லட்சம், கூட்டாக ரூ. 4 லட்சம் வரை முதலீடு செய்யலாம்.
* ஆறாண்டுக்குப் பின் முதலீட்டில் 10% போனஸ்

* ஒவ்வொரு ரூ. 500/ முதலீட்டிற்கும் ஒரு இலவச பரிசுக்கூப்பன் உண்டு. (மாருதி கார் முதல் ஸ்கூட்டர், E.C. கலர் டிவி வரை 262 பரிசுகள்)
* ரூ. 1000/-ம் அதற்கு மேலும் முதலீடு செய்பவர்களுக்கு 1% ரொக்க ஊக்கத் தொகை பெறலாம்.

* ஒவ்வொரு ஒரு லட்சம் கூப்பன்களுக்கு மாவட்டங்களில் மாவட்ட ஆட்சித் தலைவர் முன்னிலையில் குலுக்கல் நடத்தப்படும்.
* சென்னை நகரில் ஒவ்வொரு ஒரு லட்சம் கூப்பன்களுக்கு சிறு சேமிப்புத்துறை இயக்குநர் முன்னிலையில் குலுக்கல் நடத்தப்படும்

சேமிப்பு பத்திரம் எல்லா அஞ்சல் நிலையங்களிலும் கிடைக்கும்.

பரிசுக்கூப்பன்கள்
மாவட்ட ஆட்சியாளர் அலுவலகங்கள்
வட்டாட்சியர் அலுவலகங்கள்,
வட்டார வளர்ச்சி அலுவலகங்களில் கிடைக்கும்

இயக்குநர்
**சிறுசேமிப்புத்துறை,**
143, அண்ணா சாலை,
சென்னை 600 002.
தொலைபேசி எண்: 840223 846209

**தமிழ் சினிமா முன்னேறியிருக்கிறதா? — மாணவர் போட்டி**

**ரூ. 50 பரிசு பெறும் கட்டுரை**

# பணப் பார்வையுடன்

ஒளிப்பதிவில் **light effect** பற்றி இரு இளைஞர்கள் விவாதிக்கிறார்கள். விவாதம் முடிய அரைமணி நேரம் ஆகிறது. விவாதத்தில் பங்கேற்றவர்கள் பௌதிகம் படிக்கும் மாணவர்களோ, அல்லது திரைப்படநுணுக்கம் பயிலும் மாணவர்களோ இல்லை! அந்த இளைஞர்கள் இருவரும் ஒட்டல் ஒன்றில் பணிபுரியும் ஊழியர்கள். தமிழ் சினிமா முன்னேறி உள்ளதற்கு மேலே கூறப்பட்ட நிகழ்ச்சியே சாட்சி. இன்று ஒரு படத்தின் ஒவ்வொரு கலைஞரும் விமர்சிக்கப்படுகிறார். முன்னேற்றப் பாதையில் தமிழ் சினிமா செல்வதால் தமிழ் சினிமா ரசிகனின் பார்வை மாறியிருக்கிறது. ஓர் ஒளிப்பதிவாளரின் (பி.ஸி. ஸ்ரீராம்) பெயரைப் போட்டவுடன் தியேட்டரில் கரவொலி! ஓர் அறிமுக ஆர்ட் டைரக்டரைப் (மகி, கேளடி கண்மணி) பற்றிக் கல்லூரிகளில் விவாதம். வரப்போகும் படத்துக்கு (சத்ரியன்) வைக்கப்பட்டுள்ள புகைப்படங்களில் உள்ள காமிரா டெக்னிக்கைப் பற்றிப் பரவலாகப் பேச்சு. இப்படியாகத் தொடர்கிறது.

முன்னேற்றம் அடைந்துள்ளவை தமிழ் சினிமாவின் கதையமைப்பும், காட்சி அமைப்புகளும் கூட. கணவனை விட்டு விலகத் தாலியை கழற்றி வீசி எறியும் பாலசந்தரின் நாயகி (புதுப் புது அர்த்தங்கள்); தாய் தந்தையரைப் பெயர் சொல்லி அழைக்கும் குழந்தை நட்சத்திரம் (அஞ்சலி); வில்லன் — ஹீரோ என்ற கதை போய் வில்லனிக் ஹீரோ பார்த்திபன் (புதியபாதை); தன் தோழியைக் கேலி செய்ததற்காக ரசாயன சோதனைச் சாலைக்குள் சென்று தூள் பறத்தும் நிரோஷா (கைவீசம்மா கைவீசு); ஓடிப் போயிரலாமா எனக்கேட்கும் கிதாஞ்சலி (இதயத்தைத் திருடாதே); தாய்மை அடையும் பாக்கியம் இல்லாததால் காதலியையே தாயாக்கும் கதாநாயகன் பார்த்திபன் (பெண்டாட்டி தேவை) விண்வெளிப் பாடல் அமைத்திருக்கும் மணி ரத்னம்; நாலு ஆண்களுடன் கள்ளம் கபடம் இல்லாமல் வாழும் புது வசந்தம் நாயகி; செயற்கை மழை தான் சினிமாவில் மழை என்ற பார்முலா போய் இயற்கை மழை காட்டப்பட்டிருக்கும் பாலு மகேந்திராவின் 'வீடு'; வில்லனே இல்லாத கேளடி கண்மணி; ஆபாச நடனம் இல்லாத தமிழ்ப்படமே இல்லை, ஆபாசம் இல்லாதது தமிழ்ப் படமே இல்லை, என்ற காலம் போய் ஆபாசம் இல்லாமல் வெற்றி நடை போட்டுக் கொண்டிருக்கும் புது வசந்தம்.



தமிழ் சினிமா உலகில் சுவரொட்டிகளிலும் மாற்றம்! வண்ணங்கள் அப்பிக் கொண்டு அநாகரிகமாகவும் ஆபாசமாகவும் அமைந்த சுவரொட்டிகள் இப்போது இல்லை. சுவரொட்டிகள் கறுப்பு வெள்ளையில் கூட வருகின்றன! (இதயத்தைத் திருடாதே, சந்தனக்காற்று, அஞ்சலி) புகழ் பெற்றவர்களே நல்லபடம் தர முடியும் என்ற கருத்தைப் பொய்யாக்கும் புதிய இளம் இயக்குநர்கள் தோன்றியிருக்கிறார்கள்.

மொத்தத்தில் திரைப்படத்தின் எல்லா அம்சங்களிலும் (ரசிகர் உள்பட) கலைப் பார்வை அதிகரித்திருக்கிறது. பணப் பார்வையே பிரதானம் என்ற நிலை மாறியிருக்கிறது. நல்லவற்றை ரசிக்கவும் நல்ல படங்களை வெற்றி பெறச் செய்யவும் ரசிகர்கள் முன் வருகிறார்கள். எனவே இந்த

ஆரோக்கியமான மாற்றம் நீடிக்கும். திரை உலகின் முன்னேற்றம் தொடர்கதையாகும்

இரா. பாவேந்தன்,
இறுதியாண்டு இயற்பியல்,
யாதவர் கல்லூரி,
மதுரை — 14.



"நாம பழகறது உங்க அப்பாவுக்குத் தெரிஞ்க போச்சுன்னு எப்படி உறுதியாச் சொல்றே!"

"பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழணும்னு ஒரு கண்டல்காரர் வாழ்த்திட்டுப் போறாரே; அவர்தாங்க எங்க அப்பா!"

— தஞ்சைத் தரணியன்.

**புதிய பாதைக்கு அஞ்சலி!**

"தமிழ்த்திரைப்படம் ஆரோக்கியமான பாதையில் ஐந்தடி எடுத்து வைத்தால் — சறுக்குப் பாதையில் ஐம்பதடி எடுத்து வைக்கிறதே" என்று ரசிகர்கள் கேட்கின்றனர். "90 இல் ஆரோக்கியமான பாதையில் செல்ல முயற்சி செய்கிறோம். இதன் விளைவே காதல், வன்முறை, கலாட்டாவிலிருந்து விலகிப் புதிய கலைஞர்களைக் கொண்டு தமிழ்த்திரையில் 'புதிய பாதை' போட்டு 'புதிய வசந்தம்' வரச்செய்துள்ளோம்; 'கேளடி கண்மணி' என்கிறார்கள் திரைப்படத் துறையினர்."

நல்ல பாதையில் அழைத்தால் மறுப்பு

# இணைகிறது கலைப் பார்வை!

சொல்லாமல் வந்து உங்கள் திறமைக்கு 'அஞ்சலி' செலுத்தத் தயார்" என்று ரசிகர்களும் கூறுகின்றனர்.

— எல். மாறன்,
கிறிஸ்துவ மருத்துவக் கல்லூரி,
வேலூர்.

**மசாலா ஒழிந்தது தர்ஜுமா நீங்குமா?**

நான்கு சண்டை, ஐந்து பாடல்கள், ஒரு சோகக்காட்சி என்ற வழக்கமான பழைய மசாலா ஃபார்முலா ஒழிந்து, இன்று தமிழ்த்திரைப்படம் ஒரு புதிய திருப்புமுனையைக் கண்டுள்ளது. மேலும் மேற்கண்ட மசாலா முறையில் எடுக்கப்படும் படங்கள் பெரும்பாலும் தோல்வியையே சந்திக்கின்றன. புதிய கருத்துகளும் நல்ல கதையும் கொண்ட படங்களே சமீபகாலத்தில் நல்ல வெற்றியைப் பெற்று வருகின்றன. ஆனாலும் தமிழ்த்திரையுலகம் முழுவதும் முன்னேறிவிடவில்லை. மொழிமாற்றுப்படங்கள் (டப்பிங்) மற்றும் ஆங்கிலத்திலிருந்து தர்ஜுமா ஆன படங்கள் தமிழ்த்திரையின் தரத்தைக் குறைத்துத் தொய்வை உண்டாக்குகின்றன.

—ஜ. முத்துக்குமார்,
என். ஜி. எம். கல்லூரி,
பொள்ளாச்சி.

**பக்கவாத்தியங்களே கச்சேரி ஆகுமா?**

இன்றையத் திரைப்படத் துறையின் முன்னேற்றம் என்பது பெரும்பாலும் அறிவியலின் முன்னேற்றங்களே. இவை இயக்குநரின் வேலையை எளிதாக்குகின்றன. ஆனால் இவை அனைத்தும் பக்கவாத்தியங்கள்தான். பாடகர் சிறப்பாக அமையாமல் வெறும் பக்க வாத்தியங்களைக் கொண்டு நினைவில் நிற்கும் கச்சேரியை அளித்து விட முடியாது. நல்ல கதை இல்லாத, வெறும் கண்கவர் காட்சிகளைக் கொண்ட படங்கள் பாடகர் இல்லாத கச்சேரி போன்றவையே. அறிவியல் முன்னேற்றம் கதையின் முன்னேற்றத்தோடு சேர்ந்தால்தான் மக்கள் பலனடையவும், திரைப்படங்களின் தரம் உயரவும் வாய்ப்புண்டு. டிக்கெட் விலை உயர்ந்துள்ள இந்த நேரத்தில் பணத்தையும், நேரத்தையும் பயனுள்ள முறையில் செலவழித்த நிறைவு கிடைக்கும். கதைக்கு முதல் மதிப்பு கொடுக்கப்படுவதற்கான அறிகுறிகள் மட்டுமே இன்று தென்படுகின்றன. இந்தப் போக்கு மேலும் வளர்ச்சி பெறுவதே திரைப்படங்களின் உண்மையான முன்னேற்றமாகும்.

— பா. சாந்தி,
பூ. சா. கோ. கலை அறிவியல்
கல்லூரி, கோவை — 14.

# கண்ணீர் மாலைகள் மலர் மாலைகளாகட்டும்!

## வட்டமேஜை

* 'சாந்திபுரத்து ராமுக்கண்ணு' சிறுகதை என் கண்களைக் குளமாக்கியது. நினைப்பதெல்லாம் நடப்பதில்லை. ராமுக்கண்ணு எம்.பி.பி.எஸ். ஆக வில்லை. ஆனால் அவனது அவல வாழ்க்கைக்கு யார் காரணம்...? என் நெஞ்சம் கனத்தது. கண்களில் நீர்த் துளித்தது. கதாசிரியரின் கை வண்ணத்திற்குப் பாராட்டுக்கள்.

இந்தப் பரந்த பாரதத்திலுள்ள பல கோடி 'ராமுக் கண்ணு'களுக்கு நாம் போடும் கண்ணீர் மாலைகள் அவர்கள் வாழ்வு சிறக்க மலர் மாலைகள் ஆகட்டும்!

சென்னை — 24. ஆர். சிவகுமாரன்.

* 'சாந்திபுரத்து ராமுக்கண்ணு' யதார்த்தமாய் இருந்தது. நா. முத்து நிலவன் என் மனத்தை என்னவோ செய்து விட்டார். மனம் கனமாகி... இந்தச் சமுகத்திற்காக எதையாவது செய்ய வேண்டும் என்று தோன்றியது. 'சாந்திபுரத்து ராமுக்கண்ணு' மாதிரி நா. முத்து நிலவன் நிறைய நிறைய எழுத வேண்டும்.

திருச்சி — 28. அன்பு.

* மனிதர்களில் எத்தனை நிறங்களோ அத்தனை வகை ரசனைகளும் உள்ளன. மற்றவர்களுடைய ரசனைகளையும் மதிக்கக் கற்றுக் கொடுத்தது 'ரசனைகள்' சிறுகதை.

மானம்புச்சாவடி. இரா. ஆதிநாராயணன்.

* 'கடைசிப் பெண்ணுக்குக் கல்யாணம்' — என்னால் எதுவும் செய்ய முடியாது என்று மாமனாரும் மூத்த மாப்பிள்ளையும் ஒருவருக்கொருவர் சொல்லிக் கொள்ளும் — கழுவுற மீன் — நழுவுற மீன் குணச்சித்திரங்கள் கா. க. வேலாயுதன் படைப்பில் அமர்க்களம்!

சென்னை — 28. எம். தியாகராஜன்.

* 'வானைப் பிளக்கும் கோஷங்கள் இல்லை; காதுகளைக் கிழிக்கும் வாக்குறுதிகள் இல்லை. எல்லா சாதனைகளும் அமைதியாகவே நடந்து கொண்டிருக்கின்றன....' — கவர் ஸ்டோரியின் ஆரம்பமே அதை ஊன்றிப் படிக்கும் ஆர்வத்தை ஏற்படுத்தியது. குன்றக்குடி அடிகளார் மக்களின் தேவை என்ன என்பதை மக்களைக் கொண்டே திட்டமிடச் செய்தது பாராட்டப்பட வேண்டிய ஒன்று.

தஞ்சாவூர் — 1. ஆர். ராம்சந்தர்.

* மளிகைக் கடை சாமான் பட்டியலைப் போன்று உள்ளது குன்றக்குடி கிராமத்தில் தோன்றியுள்ள நிறுவனங்களின் பட்டியல். மக்கள் idle ஆக உள்ள பல கிராமங்களைப் பற்றிக் கேள்விப்பட்ட நமக்கு இப்படி ஒரு ideal கிராமத்தைப் பற்றிப் படிக்கும் போது வியப்பாகவும் சந்தோஷமாகவும் உள்ளது.

மாடம்பிள்ளைதர்மம். ஜ. எஸ். வாசு.

* இதழைக் கையில் தொட்டேன்...! அப்பப்பா...! இருந்தாலும் இவ்வளவு சூடா...? தலையங்கத்தை ஊதி, ஊதித்தான் படிக்க, சுவைச்சேன்...!

வேலூர் — 3. ம. செ. நேசன்.

* அடேயப்பா! வஞ்சப் புகழ்ச்சியில் உங்களை மிஞ்ச முடியாது போலிருக்கிறதே...! துணிச்சலான தலையங்கத்தின் மூலம் மக்களின் வேதனைகளையே தமிழக அரசின் சாதனைகளாகப் பட்டியலிட்டுக் காட்டியதுடன், புகழ்வது போல அரசியல் தலைமையை ஒரு பிடி பிடித்திருப்பது பாராட்டத்தக்கது.

கொண்டமநாயக்கன்பட்டி. க. ராம்குமார்.

* 'வேலை கிடைச்சிருச்சு' படத்தைப் பற்றி ரசிகர்கள் செய்திருந்த விமர்சனத்தில் 'அனல் அடிச்சிருச்சு'. அதற்கு பட இயக்குனர் பி. வாசு அளித்திருந்த பதில்களில் 'ஒரே நழுவல் தெரிஞ்சிருச்சு'.

மதுரை — 1. பி. எல். பரமசிவம்.

* டாக்டர் பதில்கள் பகுதியில் மஞ்சள் காமாலை பற்றி ஒரு பதில் இடம்பெற்றிருந்தது. இரத்தம் மூலம் பரவும் ஜாண்டிஸ் நோய்க்கு (ஹெபடைடிஸ் பி) தடுப்பு ஊசி (Vaccine) இப்பொழுது கிடைக்கிறது. இந்த நோயைப் பொறுத்தவரை இது ஒரு முக்கியமான மருத்துவச் சாதனை ஆகும். விலை மட்டும் அதிகம். **ஒரு கோர்ஸ் தடுப்பு ஊசிக்குச் சுமார் எழுநூறு ரூபாய் ஆகிறது.**

ஒருவருக்குப் போட்ட ஊசியே மற்றவருக்கும் பயன்படுத்தும் போதும் ஜாண்டிஸ் நோய் பரவ வாய்ப்பு உள்ளது. எனவேதான் பயன்படுத்தியதும் எறிந்து விடும் (Disposable) ஊசிகளை உபயோகிப்பது இப்பொழுது நிறைய மருத்துவமனைகளில் பழக்கமாகி வருகிறது.

கோவை. டாக்டர் ரகு.

* சாதாரண கான்ஸ்டபிள்களுக்கே முழு பேண்ட்டுடன் சீருடை வந்து பல ஆண்டுகள் ஆகின்றன. நீங்களோ கருத்துப் படத்தில் போலீஸ் அதிகாரிகளுக்கு ஆப் பேண்ட் சீருடை அணிவித்து இருப்பது சரிதானா? கல்கி — 'பழம்பெரும் பத்திரிகை' என்பதை இப்படியா காட்டிக் கொள்வது?

திருக்குவளை. பவித்ரமரியா.

* தீவிரவாதிகளின் கையில் சிக்கிய இந்துக்கள் காஷ்மீரில் தவிப்பதைப் பார்க்கும் போது நம் நாடு மற்றொரு தென்னாப்பிரிக்காவோ என்றுதான் எண்ணத் தோன்றுகிறது.

திருச்சி — 2. என். சம்பத்.

* தி. மு. க. ஆட்சியின் சாதனைகளையும், சோதனைகளையும் வெகு துல்லியமாகவே தங்கள் கட்டுரைகளின் மூலம் விமர்சித்திருக்கிறார்கள் மாணவர்கள்! மாணவப் பருவத்திலேயே அரசியல் நிகழ்வுகளைக் கூர்மையான கண்ணோட்டத்துடன் இளைஞர்கள் கவனித்து வருகிறார்கள் என்பதற்கு அந்தக் கருத்துச் சிதறல்கள் சான்று.

நெல்லிக்குப்பம். ரா. ஜோதிராமன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka



# என் பாட்டி ஒரே ஒரு முறைதான் பொய் சொன்னாள்...

தினமும் நான் சாப்பாட்டை முடிக்க பாட்டி எனக்கு ஸ்பூன் நிறைய ஊறுகாய் வைப்பது வழக்கம். ஆகா, காரமும் மணமும் நிறைந்த, அருமையான, வீட்டிலேயே தயாரான ஊறுகாய்... ஆனால் நான் ருசித்துச் சாப்பிட்டது உண்மையில் ருசி ஊறுகாய்தான் என்பதை, பாட்டி என்னிடம் சொல்லாமலே மறைந்து விட்டாள். இப்போதுதான் எனக்கு அந்த உண்மை தெரியும். ஆனால் ஒன்று மட்டும் சொல்வேன். ருசி ஊறுகாய்க்கும் வீட்டிலேயே தயாரிக்கப்படும் ஊறுகாய்க்கும் வித்தியாசமே கண்டுபிடிக்க முடியாது. ஏனெனில் பாட்டியின் தயாரிப்பான வீட்டு ஊறுகாய் போலவே ருசி ஊறுகாய் விறுவிறுப்பானது. நல்ல மணத்துடன் கூடியது. மேலும் மேலும் சுவைக்கத் தூண்டுவது. இது முழுக்க முழுக்க உண்மைதான்!

சுவை மிக்க 19 வகைகளில் கிடைக்கிறது.




ருசி ஃபுட் பிராடக்ஸ்,
"ஷ்யாம் ஹவுஸ்",
125, ஜி.என். செட்டி ரோடு சென்னை 600 017

போன்: 869290/869438

SHYAM GROUP
ENTREPRENEURS WITH VISION




LINTAS M RFP 3 2013 TM

**வீட்டிலே தயாரித்தது போன்ற சுவை.**
**செய்யும் சிரமம் சிறிதும் இல்லை**